# சிவானந்த லஹரீ

**கலாப்4யாம் சூடா3லங்க்ருத - சசிகலாப்4யாம் நிஜதப -**
**ப2லாப்4யாம் பக்தேஷு ப்ரகடித - ப2லாப்4யாம் ப4வது மே ।**
**சிவாப்4யா - மஸ்தோக - த்ரிபு4வனசிவாப்4 யாஹ்ருதி3 புனர் -**
**ப4வாப்4யா - மானந்த3 - ஸ்புர2- த்3னுப4வா ப்4யாம் நதிரியம் ॥** 1

கலை வடிவாகியவர்களும், சந்திரக்கலையை சிரஸிலணிந்தவர்களும், ஒருவருக்கொருவர் தவத்தின் பயன்வடிவாகியவர்களும், அடியார்களிடம் அருள் பயனை விளங்கச் செய்பவர்களும், மூவுலகிற்கும் குறைவற்ற மங்களங்களை அருள்பவர்களும், இருதயத்தில் நினைக்குந்தோறும் புதிது புதிதாய்த் தோன்றுபவர்களும், பிரம்மானந்தா நுபவத்தை வெளிப்படுத்துகிறவர்களுமாகிய சிவசக்தி ஐக்கிய வடிவினர்க்கு எனது இந்த நமஸ்காரம் உரித்தாகுக.

**க3லந்தீ சம்போ4 த்வச்சரிதஸரித: கில்பி3ஷரஜோ**
**த3லந்தீ தீ4குல்யா - ஸரணிஷு பதந்தீ விஜயதாம் ।**
**தி3சந்தீ ஸம்ஸார - ப்4ரமண - பரிதாபோபசமனம்**
**வஸந்தீ மச்சேதோ - ஹ்ரத3 பு4வி சிவானந்த3 - லஹரீ ॥** 2

சம்புவே! உனது சரித்திரமாகிய நதியினின்று, பெருகுவதாயும், பாவமாகிய புழுதியைப் போக்குவதாயும், புத்தியெனும் வாய்க்கால் வழிகளில் பாய்ந்து செல்வதாயும், பிறவிச் சுழலுண்டாக்கும் பெருந்துன்பத்திற்கு அமைதியை அளிப்பதாயும், எனது சித்தமாகிய மடுப்பிரதேசத்தில் வந்து தேங்குவதாயும் உள்ள சிவானந்தம் என்னும் வெள்ளம் (சிவானந்த லஹரீ) வெற்றியுடன் விளங்கட்டும்.

**த்ரயீவேத்3யம் ஹ்ருத்3யம் த்ரிபுரஹர - மாத்3யம் த்ரிநயனம்**
**ஜடாபா4ரோதா3ரம் சலது3ரக3 ஹாரம் ம்ருக3த4ரம்**
**மஹாதே3வம் தே3வம் மயி ஸத3ய - பா4வம் பசுபதிம்**
**சிதா3லம்ப3ம் ஸாம்ப3ம் சிவமதிவிட3ம்பம் ஹ்ருதி3 ப4ஜே ॥** 3

வேதங்களாலறியத் தக்க வரும், மனதிற்கினியவரும், முப்புரங்களையழிப்பவரும், அனைத்திற்கும் முதல்வரும், முக்கண் படைத்தவரும், சடைகளையணிவதால் கம்பீரத்தோற்றமுடையவரும், அசையும் பாம்பை மாலையாயணிந்தவரும், மானைக் கையிலேந்தியவரும், தேவர்களில் சிறந்தவரும், ஸ்வயம் ப்ரகாசமானவரும், என்னிடம் கருணையுள்ள நோக்கமுடையவரும், ஜீவர்களுக்கு நாயகரும், அறிவிற்கு உறைவிடமானவரும், அம்பிகையுடன் கூடியவரும், நடிப்புத்திறமை மிகுந்தவருமான பரமசிவனை உள்ளத்தில் தியானிக்கின்றேன்

**ஸஹஸ்ரம் வர்த்தந்தே ஜக3தி விபு3தா4: க்ஷுத்3ர - ப2லதா3:**
**ந மன்யே ஸ்வப்னே வா தத3னுஸரணம் தத்க்ருதப2லம் ।**
**ஹரி - ப்3ரஹ்மாதீ3னாம்பி நிகடபா4ஜா - மஸுலப4ம்**
**சிரம் யாசே சம்போ4 சிவ தவ பதா3ம்போ4ஜ - ப4ஜனம் ॥** 4

உலகில் அல்ப பயனைக் கொடுக்கும் தேவர்கள் ஆயிரக் கணக்காக இருகின்றனர். கனவிலும் அவர்களை வழிபடுவதையும், அதனால் ஏற்படும் பயனையும் நான் கருதமாட்டேன். சம்போ! அருகிலிருந்த போதிலும் விஷ்ணு, ப்ரும்மா முதலானவர்களுக்கும் அடைதற்கரிதான உன் திருவடித் தாமரையைத் தொழுவதையே என்றும் வேண்டுகிறேன்.

**ஸ்ம்ருதௌ சாஸ்த்ரே வைத்3யே சகுன-கவிதா-கா3ன பணிதௌ**
**புராணே மந்த்ரே வா ஸ்துதி - நடன ஹாஸ்யேஷ்-வசதுர: ।**
**கதம் ராஜ்ஞாம் ப்ரீதிர் ப4வதி மயி கோऽஹம் பசுபதே**
**பசும் மாம் ஸர்வஜ்ஞ ப்ரதி2த க்ருபயா பாலய விபோ4 ॥** 5

அறநூல்களிலும், சாஸ்திரங்களிலும், வைத்யத்திலும், சகுணம், கவித்வம், ஸங்கீதம் முதலியனவற்றால் பிறரைக் களிக்கச் செய்வதிலும், புராணத்திலும், மந்த்ர ப்ரயோகத்திலும், புகழ்தல், நடித்தல், வேடிக்கையாகப் பேசுதல் போன்ற வற்றில் யான் திறமையற்றவன். ஆகையால் அரசர்களுக்கு என்னிடம் ப்ரீதி எங்ஙனமுண்டாகும்? எல்லாம் அறிந்த பசுபதியே! நான் எதைச் சேர்ந்தவன்! ஒன்றும் அறியாத என்னை கருணைகொண்டு காப்பாற்றும், எங்கும் நிறைந்த விடிவே !

**க4டோ வா ம்ருத் - பிண்டோ3ப்யணுரபி ச தூ4மோऽக்னி-ரசல:**
**படோ வா தந்துர்வா பரிஹரதி கிம் கோ4ர சமனம் ।**
**வ்ருதா கண்டக்ஷோபா4ம் வஹஸி தரஸா தர்க்கவசஸா**
**பதா3ம்போ4ஜம் சம்போ4ர் - ப4ஜ பரம-ஸௌக்2கியம் வ்ரஜஸுதீ4 ॥** 6

அறிஞர் உலகே! குடம் - மண்கட்டி. அணு, புகை-நெருப்பு-மலை, துணி, நூல் என்று காரணகாரிய நியாயங்களை விவாதிக்கும் வீணான தர்க்க சாஸ்திரச் சொற்களால் தொண்டை வரட்சியை ஏற்கிறாய். இவை கொடிய யமனை விலகச் செய்யுமா? ஆகவே, பரமசிவனது திருவடியைத் தியானம் செய்து பேரின்பத்தைப் பெறுவாயாக.

**மனஸ்தே பாதா3ப்3ஜே நிவஸது வச: ஸ்தோத்ர-ப2ணிதௌ**
**கரௌ சாப்4யர்ச்சாயாம் ச்ருதிரபி கதா2-கர்ணன-விதௌ4 ।**
**த்வ த்4யானே பு3த்3திர் - நயனயுக3ளம் மூர்த்தி-விபவே**
**பரக்3ரந்தா2ன் கைர்வா பரமசிவ ஜானே பரமத: ॥** 7

பரமேச்வரா ! எனது மனம் நினது திருவடியிலும் வாக்கு உன் புகழைப் பாடுவதிலும், இருகைகளும் உன் பூஜையிலும், செவி உன் சரிதத்தைக் கேட்பதிலும், புத்தியானது உன் தியானத்திலும், இரு கண்களும் உன் திருமேனியின் அழகிலும் நிலைபெறட்டும். அதன் பிறகு எவைகளால் வேறு நூல்களை யான் அறியக்கூடும்? (எல்லா இந்திரியங்களையும் உன் பாற்படுத்திய பின் எப்படி வீணாக நூல்களைப் படிக்க முடியும்?)

**யதா$^2$ பு$^3$த்$^3$தி$^4$: சுக்தௌ ரஜத - மிதி காசாச்மனி மணிர் -**
**ஜலே பைஷ்டே க்ஷீரம் ப$^4$வதி ம்ருக$^3$தருஷ்ணாஸு ஸலிலம் ।**
**ததா$^2$ தே$^3$வ - ப்ராந்த்யா ப$^4$ஜதி ப$^4$வத$^2$ன்யம் ஜடஜனோ**
**மஹா - தே$^3$வேசம் த்வாம் மனஸி ச ந மத்வா பசுபதே ॥** 8

பசுபதியே ! எப்படி சிப்பியில் வெள்ளியும், காசக் கல்லில் இரத்தினமும், மாவு கரைத்த நீரில் பாலும், கானலில் நீரும் (பிரமையான) எண்ணத்தில் உண்டாகிறதோ, அப்படியே அறிவற்ற மனிதன் பிரமையால் (மற்ற தேவர்களைப் பரமேச்வரன் என்று எண்ணி) தேவர்களுக்கும் ஈசனான உன்னை நினையாது மற்ற தெய்வத்தை சேவிக்கிறான்.

**கபீ$^4$ரே காஸாரே விசதி விஜனே கோ$^4$ரவிபினே**
**விசாலே சைலே ச ப்$^4$ரமதி குஸுமார்த்த$^2$ம் ஜட$^3$மதி: ।**
**ஸமர்ப்யைகம் சேதஸ்ஸரஸிஜ - முமாநாத$^2$ ப$^4$வதே**
**ஸுகே$^2$னாவஸ்துதா$^2$தும் ஜன இஹ ந ஜானாதி கிமஹோ ॥** 9

உன் பூஜைக்காக புஷ்பத்தை நாடும் அறிவிலி, ஆழமான மடுவிலும், ஜன நடமாட்டமில்லாத காட்டிலும், பரந்த மலையிலும் புகுந்து அலைகிறான். உமா தேவியின் நாதனே! தனது மனமாகிய ஒரு தாமரைப்பூவை அன்புடன் உனக்கு அளித்து இனிது நிலையாக இருக்க இவ்வுலகில் மனிதன் ஏனோ அறியாமலிருக்கிறான்! அந்தோ!

**நரத்வம் தே$^3$வத்வம் நக$^3$ - வன - ம்ருக$^3$த்வம் மசகதா**
**பசுத்வம் கீடத்வம் ப$^4$வது விஹக$^3$த்வாதி - ஜனனம் ।**
**ஸதா$^2$ த்வத்பாதா$^3$ப்ஜ - ஸ்மரண - பரமானந்த$^3$ லஹரீ**
**விஹாராஸக்தம் சேத்$^3$ த்$^4$ருத்$^3$ய - மிஹ கிம் தேன வபுஷா ॥** 10

மானிடத்தன்மை, தேவத்தன்மை, மலை, காடுதனில் வாழும் மிருகத்தன்மை, கொசுத்தன்மை, பசுத்தன்மை, புழுத்தன்மை, பறவைத்தன்மை, இவைகளில் எதுவானாலும் (அது எனக்கு) ஏற்படட்டும். (எப்படிப்பட்ட பிறப்பாகிலும்) இடைவிடாது உனது திருவடித் தாமரையின் நினைவாகிய சிறத ஆனந்தப்பெருக்கில் விளையாடுவதில் (என்) உள்ளம் ஈடுபடுமானால், எவ்வுடலையடைந்தாலும் என்ன குறை?

**வடுர்வா கே3ஹீ வா யதிரபி ஜடீவா ததி3தரோ**
**நரோ வா ய : கச்சித் ப4வது ப4வ கிம் தேந ப4வதி ।**
**யதீ3யம் ஹ்ருத்பத்3மம் யதி3 ப4வத3தீ4னம் பசுபதே**
**ததீ3யஸ் - த்தம் சம்போ4 ப4வஸி ப4வபா4ரம் ச வஹஸி ॥** 11

ப்ரும்மசாரியாகவோ, க்ருஹஸ்தனாகவோ, வானப்ரஸ்தனாகவோ, அதிவர்ணாச்சிரமியாகவோ, ஸந்நியாஸியாகவோ, இவையற்றவராகவோ மனிதனிருக்கட்டும். அதனால் என்ன நேரிடும்? மங்களமான பசுபதியே! (எந்த ஆச்ரமத்திலிருப்பவனாயினும்) எவனது உள்ளமாகிய கமலம் உமக்கு வயப்படுமோ, அவனுக்கு வசமாக நீ ஆகி விடுகிறாய். நன்மை பயக்கும் நீயே அவனது பிறவிச் சுமையைத் தாங்குகிறாய்.

**கு3ஹாயாம் கே3ஹே வா ப3ஹிரபி வனே வா(அ)த்3ரிசிக2ரே**
**ஜலே வா வஹ்நௌ வா வஸ்து வஸதே: கிம் வத3 பலம்2 ।**
**ஸ்தா2 யஸ்யைவாந்த: கரண - மபி சம்போ4 தவ பதே3**
**ஸ்திதஞ்சேத்3 யோகோ3 (அ) ஸௌ ஸ ச பரமயோகி3 ஸ ச ஸுகீ2 ॥** 12

ஒருவன் குகையிலோ, வீட்டிலோ, வெளியிலோ, காட்டிலோ, மலை உச்சியிலோ, நீரிலோ, தீயிலோ வசிக்கட்டும். ஆங்காங்கே வசித்ததால் யாது பயன்? சொல், சம்புவே! எவனது உள்ளம் எப்பொழுதும் உனது சரணங்களில் நிலை பெறுமோ அவனே மேலான யோகி; அவனே பேரின்பம் காண்பவன்.

**அஸாரே ஸம்ஸாரே நிஜப4ஜன - தூ3ரே ஜட3 தி4யா**
**ப்ர4மந்தம் மாமந்த4ம் பரமக்ருபயா பாது - முசிதம் ।**
**மத3ன்ய : கோ தீ3னஸ் - தவ க்ருபண - ரக்ஷாதிநிபுணஸ் -**
**த்வத3ன்ய: கோ வா மே த்ரிஜக3தி சரண்ய: பசுபதே ॥** 13

பசுபதியே! பயனற்றதும், ஆத்ம தியானத்திற்குப் புறம்பானதுமான பிறவிச் சுழலில் அறிவிழந்து அலைந்துவரும் குருடனாகிய என்னை, மிகுந்த கருணை கொண்டு காப்பது உனக்கு ஏற்றது! உனது கருணையைக் காட்ட என்னைவிட எளியவன் யாருள்ளான்? எளியோர்களைக் காப்பதில் நிபுணனான உன்னைக்காட்டிலும் அடைக்கலத்திடமாக (த்தான்) வேறு யார் எனக்கு மூவுலகிலும் உளர்?

**ப்ரபு4 ஸ்த்வம் தீ3னானாம் க2லு பரமப3ந்து4: பசுபதே**
**ப்ரமுக்2யோ (அ)ஹம் தேஷாமபி கிமுத ப3ந்து4த்வமனயோ: ।**
**த்வயைவ க்ஷந்தவ்யா: சிவ மத3பராதா4ச்ச ஸகலா:**
**ப்ரயத்னாத் கர்த்தவ்யம் மத3வன - மியம் ப3ந்து4ஸரணி: ॥** 14

பசுபதியே ! எல்லாம் வல்லவனான நீ ஏழைப்பங்காளன். அவ்வேழைகளுள் யான் முதல்வன். நம்மிருவருக்கும் உள்ள உறவைப்பற்றிக் கூறத்தேவையில்லை.

எனது குற்றங்கள் அனைத்தையும் மன்னித்து எவ்விதத்திலும் என்னைக் காப்பதே சாலச் சிறந்தது. இது தான் உறவினர்களின் மரபு.

**உபேக்ஷா நோ சேத் கிந் ந ஹரஸி ப4வத்3த்4யான விமுகா2ம்**
**து3ராசாபூ4யிஷ்டா2ம் விதி4லிபி - மசக்தோ யதி3 ப4வான் |**
**சிரஸ்தத்3வைதா4த்ரம் ந நக2லு ஸுவ்ருத்தம் பசுபதே**
**கத2ம் வா நிர்யத்னம் கர - நக2 - முகே2னைவ லுலிதம் ||** 15

பசுபதியே ! உனக்கு என்னிடத்தே வெறுப்புணர்ச்சி இல்லையானால், பேராசை நிரம்பி, உனது நினைவில் ஈடுபடாத எனது தலை எழுத்தை ஏன் மாற்றவில்லை? அப்படி நீ (பிரம்மா எழுதியதை மாற்றும்) திறமையற்றவனாயின் கை நகத்தைக்கொண்டே சிரமமின்றி பிரும்மாவினுடைய அந்தக் கெட்டியான தலை உன்னால் எங்ஙனம் கிள்ளி அகற்றப்பட்டது? (பிரம்மாவின் ஐந்து முகங்களில் ஒன்றைக் கொய்தவர் பரமேசுவரனே.)

**விரிஞ்சிர் - தீ3ர்கா4யுர் - ப4வது ப4வதா தத்பரசிரச்-**
**சதுஷ்கம் ஸம்ரக்ஷ்யம் ஸ க2லு பு4வி தை3ன்யம் லிகி2தவான் |**
**விசார: கோ வா மாம் விசத க்ருபயா பாதி சிவ தே**
**கடாக்ஷ - வ்யாபார: ஸ்வயமபி ச தீ3னாவனபர: ||** 16

பிரும்மா நீண்ட ஆயுள் உள்ளவராயிருக்கட்டும்! அவரது மிஞ்சியுள்ள நான்கு தலைகளையும் நீங்கள் ரக்ஷியுங்கள். இப்புவியில் அவரல்லவா இந்த தீனத்தன்மையை என் தலையில் எழுதினார். இதற்காக என்ன கவலை? மாசற்ற மங்களவடிவினனான உனது கடைக்கண் பார்வை இயற்கையான எளியோர்களை காக்க வல்லது. என்னையும் காப்பாற்றுகிறது. (பிரம்மா எனக்கு தீனத்தன்மையை விதித்ததால் தான், உனது தீனரக்ஷக ஆற்றலை அநுபவிக்க முடிகிறது. எனவே, அவரை எஞ்சிய நான்கு தலைகளோடு சிரஞ்ஜீவியாக விடுவாயாக!)

**ப2லாத்3வா புண்யானாம் மயி கருணயா வா த்வயி விபோ4**
**ப்ரஸன்னே஽பி ஸ்வாமின் ப4வத3 மல - பாதா3ப்3ஜ-யுக3ளம் |**
**கத2ம் பச்யேயம் மாம் ஸ்த2க3யதி நமஸ்ஸம்ப்ர4ம-ஜுஷாம்**
**நிலிம்பானாம் ச்ரேணிர் - நிஜ - கனக - மாணிக்ய-மகுடை: ||** 17

எங்கும் நிறைந்த இறைவனே! யான் செய்த நற் கர்மப்பயனாலோ, நினது கருணையாலோ என் முன்னே நீ தோன்றினாலும், நிர்மலமான உன் இணையடி கமலத்தை எப்படிக் காண்பேன்? உன்னை வணங்க ஆவல்கொண்ட தேவர்கள் முண்டியடித்து அவர்களது மாணிக்கமிழைத்த கிரீடங்கள் என்னை (என் பார்வையை)த் தடுக்கின்றனவே!

**த்வமே கோ லோகானாம் பரமப2லதோ3 திவ்ய - பத3வீம்**
**வஹந்தஸ் - த்வன்மூலாம் புனரபி ப4ஜந்தே ஹரிமுகா2: |**
**கியத்4வா தா3க்ஷிண்யம் தவ சிவ மதா3சா2 ச கியதீ**
**கதா2 வா மத்3ரக்ஷாம் வஹஸி கருணா - பூரித-த்3ருசா || 18**

சிவனே! நீர் ஒருவர்தான் மாந்தர்களுக்கு நற்பயனை யளிக்கவல்லவர். அங்ஙனம் நின் மூலம் உயர்பதவிகளைப் பெற்ற விஷ்ணு முதலானோரும் மேன் மேலும் உன்னையே சேவிக்கின்றனர். உனது கருணை எத்தகையது? எனது ஆசையும் எத்தகையது என்று உன் கருணை நிறைந்த பார்வையினால் என்னைக் காத்தருள்வாய்?

**து3ராசா - பூ4யிஷ்டே து3ரதி4ய - க்3ருஹத்3 வார - க4டகே**
**து3ரந்தே ஸம்ஸாரே து3ரித - நிலயே து3: க2ஜனகே |**
**மதா3யாஸம் கிம் ந வ்யபநயஸி கஸ்யோபக்ருதயே**
**வதே3யம் ப்ரீதிச்சேத் தவ சிவ க்ருதார்த்தா2: க2லு வயம் || 19**

என் தலையில் எழுதிய பிரம்மாவுக்கு உபகாரம் செய்யும் பொருட்டே கெட்ட ஆசைக்கிடமானதும், கெட்ட அதிகாரிகளின் வாயிலில் நிற்கச் செய்வதும், பாபத்திற்கிடமாகி கெட்ட முடிவையே அளிப்பதுமான இப்பிறவிச் சுழலில் நான் அலுப்புறுவதை அகற்றாதிருக்கிறாயா? இப்படி செய்வதால் உனக்குப் ப்ரீதி ஏற்படுமானால் அந்தப் ப்ரீதிக்கு காரணமாகி கடைத்தேறியவர்களாகிறோம்! இதில் ஐயமில்லை.

**ஸதா3 மோஹாடவ்யாம் சரதி யுவதீனாம் குசகி3ரௌ**
**நடத்யாசா - சாகா2ஸ்வடதி ஜடி2தி ஸ்வைரமபி4த: |**
**கபாலின் பி4க்ஷோ மே ஹ்ருத3யகபி - மத்யந்த - சபலம்**
**த3ருட4ம் பக்4த்வா ப3த்3த்4யா சிவ ப4வத3தீ4னம் குரு விபோ4 || 20**

சிவனே! எங்கும் நிறைந்தவனே! எனது மனமெனும் குரங்கு மயக்கமெனும் பெருங்காட்டில் இடைவிடாது அலைகிறது. பருவ நங்கைகளது நகில்களாகிய மலையில் நடனமாடுகிறது. துராசைகளாகிய கிளைகளில் வேகமாக தாவித் திரிகிறது. நீர் கபாலத்தை கையிலேந்தி பிச்சை எடுப்பவர். ஆகவே அங்கு மிங்கும் ஓடும் எனது மனதாகிய குரங்கை, உன்னிடம் உள்ள பக்தி என்னும் கயிற்றைக் கொண்டு உறுதியாகக்கட்டி உனக்குட்பட்டதாக செய்து கொள்வாயாக. (வெறுமே மண்டையோட்டை நீட்டி பிச்சைக் கேளாமல் என் மனக் குரங்கை ஆட்டும் குரங்காட்டியாக இருப்பாயாக!)

**த்4ருதி - ஸ்தம்பா4தா4ராம் த்3ருட4கு3ண - நிப3த்3தா4ம் ஸக3மனாம்**
**விசித்ராம் பத்3மாட்4யாம் ப்ரதிதி3வஸ - ஸன்மார்க3 கடி4தாம் |**
**ஸ்மராரே மச்சேத : ஸ்பு2ட - பட - குடீம் ப்ராப்ய விசதா3ம்**
**ஜய ஸ்வாமின் சக்த்யா ஸஹ சிவகணை: ஸேவிதவிபோ || 21**

காமனது பகைவனே! சிவகணங்களால் ஸேவிக்கப்பட்ட ஆண்டவனே! விச்வவியாபகனான விபுவே! எனது மனமாகிய கூடாரம், தைரியம் எனும் நடுத் தூணை ஆதாரமாகக் கொண்டது. அழுத்தமான முக்குணங்கள் என்னும் கயிற்றால், கட்டப்பட்டது. (குணம் என்றால் கயிறு என்றும் பொருள்படும்) இக்கூடாரம் விரும்பிய இடத்திற்கு எடுத்துச் செல்லக்கூடியது. இது பலவண்ணமானது. (பல வண்ணத் துணிகளால் கூடாரம் அமைப்பது போல் மனக் கூடாரத்தில் பல எண்ணங்கள் உள்ளன). தாமரை போன்ற வடிவம் கொண்டது. (இதயகமலம் குறிப்படிப்பெற்றுள்ளது) தினமும் நல்வழியில் சேர்க்கப்படுவது. நல்வழி என்பது கூடாரம் நல்ல சாலையில் இருப்பதையும், மனம் நல்ல நெறியில் இருப்பதையும் குறிப்பிடும். அழுக்கற்ற தன்மையால் அமைந்தது. இக் கூடாரத்தில் பராசக்தியுடன் வந்தமர்ந்து வெற்றியுடன் விளங்குவாயாக!

**ப்ரலோபா4த்யை - ரர்த்தா2ஹரண - பரதந்த்ரோ த4னி-க்ருஹே**
**ப்ரவேசோத்3யுக்தஸ்ஸன் ப்ர4மதி ப3ஹுதா தஸ்கரபதே ।**
**இமம் சேதச்சோரம் கத2 - மிஹ ஸஹே சங்கர விபோ**
**தவாதீ4னம் க்ருத்வா மல நிரபராதே4 குரு க்ருபாம் ॥** 22

எங்கும் நிறைந்த விபுவும் மங்களத்தையளிக்கும் சங்கரனுமாகிய கள்வர் தலைவரே! பேராசை முதலான தீய குணங்களால் பிறர் பொருளை அபஹரிப்பதில் நோக்கங் கொண்டு பணக்காரர் வீட்டில் நுழைவதில் ஊக்கங்கொண்டு பலவகையில் திரிகின்றது. இந்த (என்) மனமாகிய திருடனை நான் எங்ஙனம் சகிப்பேன். (உள்ளங்கவர் மகா திருடன் உனக்குள்பட்டவனாக என்னை ஆக்கிக்கொண்டு குற்றமற்றவனான என் விஷயத்தில் அருள் கொள்வாயாக!)

**கரோமி த்வத் - பூஜாம் ஸபதி3 ஸுக்2தோ3 மே ப4வ விபோ4**
**விதி4த்வம் விஷ்ணுத்வம் தி3சஸி க2லு தஸயா: ப2லமிதி**
**புனச்ச த்வாம் த்3ரஷ்டும் தி3வி பு4வி வஹன் பக்ஷிம்ருகதா -**
**மத்3ருஷ்ட்வா தத்கே2 த3ம் கதமிஹ ஸஹே சங்கர விபோ4 ॥** 23

எங்குமிருந்து மங்களமளிப்பவனே! உனது பூஜையை நான் செய்ததும் எனக்கு பேரின்பத்தையே யளிக்காது ப்ரும்மப் பதவியையோ, விஷ்ணு பதவியையோ கொடுப்பாயானால் மீண்டும் உன்னைப் பார்ப்பதற்கு (பிரம்மாவைப்போல் அன்ன உருவமெடுத்து ஆகாயத்திலும் (விஷ்ணுவைப்போல்) வராஹ உருவத்தில் பூமியிலும் அலைந்து இறுதியில் உன்னைக் காணாது ஏற்படும் வருத்தத்தையே அடைவேன். இதனை எங்ஙனம் சகிப்பேன்.

**கதா3 வா கைலாஸே கனகமணிஸௌதே4 ஸஹகணைர் -**
**வஸன் சம்போ4ரக்3 ரே ஸ்பு2ட - க4டித - மூர்தா4ஞ்ஜலிபுட : ।**
**விபோ4 ஸாம்ப3 ஸ்வாமின் பரமசிவ பாஹீதி நிக3த3ன்**
**விதா4த்ருணாம் கல்பான் க்ஷணமிவ விநேஷ்யாமி ஸுக2த: ॥** 24

எப்போது சிவகணங்களோடு சேர்ந்து யான் சிரமேல் கைகூப்பி, பொன்னும் இரத்தினமும் நிறைந்த வெள்ளி மலை தனில் இன்பத்திற்கு காரணமான கல்லானை முன்னே நின்று, ஜகன்மாதாவுடன் கூடி எங்கும் நிறைந்து விளங்கும் இறைவா! என்னைக் காத்தருள்வீராக எனச் சொல்லியவாறு ப்ரும்ம கல்பமான நீண்டகாலத்தையும் நொடிப்பொழுது போல கடத்துவேனோ!

**ஸ்தவைர் - ப்$^{3}$ரஹ்மாதீ$^{3}$னாம் ஜயஜய - வசோபி$^{4}$ர் - நியமினாம்**
**க$^{3}$ணானாம் கேலீபி$^{4}$ர் மத்$^{3}$கல - மஹோக்ஷஸ்ய ககுதி$^{3}$ |**
**ஸ்தி$^{2}$தம் நீலக்$^{3}$ரீ வம் த்ரிணயன: முமாச்லிஷ்ட - வபுஷம்**
**கதா$^{3}$ த்வாம் பச்யேயம் கரத்$^{4}$ருத - ம்ருக$^{2}$ம் க$^{2}$ண்ட$^{3}$பரசும் ||** 25

ப்ரும்மா முதலானோர் துதிக்க, ரிஷிகள் ஜய சப்தம் கொண்டு முழங்க, ப்ரமதகணங்கள் விளையாட, கொழுத்து விளங்கும் பெரிய ரிஷபத்தின் திமில்மேல் உமையால் தழுவப்பட்ட உடலை உடையவனாக வீற்று, நீலகண்டனாய், முக்கண் படைத்து, கைகளில் மானையும், வெட்டுக் கோடரியையும் ஏந்தியவனாக விளங்கும் உன்னை காண்பேனோ!

**கதா$^{3}$ வா த்வாம் த்$^{3}$ருஷ்ட்வா கி$^{3}$ரிச தவ ப$^{4}$வ்யாங்க்ரி$^{4}$யுக$^{3}$ளம்**
**க்$^{3}$ருஹீத்வா ஹஸ்தாப்$^{4}$யாம் சிரஸி நயனே வக்ஷஸி வஹன் |**
**ஸமாச்லிஷ்யாக்$^{4}$ராய ஸ்பு$^{2}$ட - ஜலஜ - க$^{3}$ந்தா$^{4}$ன் பரிமலா -**
**னலப்$^{4}$யாம் ப்$^{3}$ரஹ்மாத்யைர் - முத$^{2}$மனுப$^{4}$விஷ்யாமி ஹ்ருத2யே ||** 26

மலையிலறைபவனே! உன்னைக்கண்டு உனது திருவடிகளை இருகைகளாலும் பற்றி. சிரத்திலும், கண்ணிலும், மார்பிலும் அழுத்தி இறுகத் தழுவிக்கொண்டு, மலர்ந்த தாமரையினது போன்ற (அப்பாத) நறுமணத்தை முகர்ந்து ப்ரம்மா முதலான தேவர்களாலுமடையவியலாத மகிழ்ச்சியை (நான்) அடைவது எக் காலமோ!

**கரஸ்தே$^{2}$ ஹேமாத்$^{3}$ரௌ கி$^{3}$ரிச நிகடஸ்தே$^{2}$ த$^{4}$னபதௌ**
**க்$^{3}$ருஹஸ்தே$^{2}$ ஸ்வர்பூ$^{4}$ ஜாமர - ஸுரபி - சிந்தாமணி க$^{3}$ணே!**
**சிரஸ்தே$^{2}$ சீதாம்சௌ சரணயுக$^{3}$லஸ்தே$^{2}$ (அ) கி$^{2}$லசுபே$^{4}$**
**கமர்த$^{2}$ம் தா$^{3}$ஸ்யே (அ)ஹம்ப$^{4}$வது ப$^{4}$வதர்த$^{2}$ம் மம மன: ||** 27

மலையிலுறைபவனே! உனது கையிலோ பொன்மலை; அருகிலிருப்பவனோ செல்வபதியான குபேரன்; (உன்) வீட்டிலோ கற்பக விருக்ஷம், காமதேனு சிந்தாமணிகள் உள்ளன. சிரத்திலே குளிர்ந்தவனான சந்திரன்; திருவடித்தாமரை களிலோ மங்களமனைத்துமுள்ளன. இப்படியிருக்க உன்னிடமில்லாத எப்பொருளை யளிப்பேன்? ஆகவே, என் மனத்தையே உனக்கு அர்ப்பணம் செய்ததாகட்டும்!

**ஸாரூப்யம் தவ பூஜனே சிவ - மஹாதே3வேதி ஸங்கீர்தனே**
**ஸாமீப்யம் சிவ-ப4க்தி-து4ர்ய-ஜனதா-ஸாங்க3த்ய-ஸம்பா4ஷணே ।**
**ஸாலோக்யம் ச சராசராத்மக தனுத்4யானே ப4வானீபதே**
**ஸாயுஜ்யம் மம ஸித்3த4-மத்ரப4வதி ஸ்வாமின் க்ருதார்தோ2 (அ) ஸ்ம்ய ஹம் ॥ 28**

பவானீபதியே! உனது பூஜையின் பயனாக ஸாரூப்யமெனும் (உன் உருவைப் பெறும்) முக்தியையும், "சிவ, மஹாதேவ" என்ற நாமங்களை ஸங்கீர்த்தனம் செய்வதன் பயனாக ஸாமீப்யம் (என்ற உன் அண்மையான முக்தி) என்பதையும், சிவபக்தியில் சிறந்து விளங்கும் பக்தர்களுடன் இணைந்து பேசுவதின் பயனாக ஸாலோக்யம் (என்ற உன் உலகில் வாழும் முக்தி) என்பதையும், சராசரப் பஞ்ச வடிவான உனது திருமேனியின் த்யானத்தின் பயனாக (உன் மயமாகவே ஆகும் முக்தியான) ஸாயுஜ்யத்தையும் இப்புவியிலே பெற்று அடைய வேண்டிய அனைத்தையும் அடைந்தவனாகிறேன்.

**த்வத் பாதா3ம்பு3ஜ - மர்சயாமி பரமம் த்வாம் சிந்தயாம்யன்வஹம்**
**த்வாமீசம் சரணம் வ்ரஜாமி வசஸா த்வாமேவ யாசே விபோ4 ।**
**வீக்ஷாம் மே தி3ச சாக்ஷஹீம் ஸகருணாம் தி3வ்யைஸ்சிரம் ப்ரார்தி2தாம்**
**சம்போ4லோககு3ரோ மதீ3ய-மனஸஸ்-ஸௌக்2யோபதேச3ம் குரு ॥ 29**

எங்கும் நிறைந்தவனே! சம்புவே! உனது திருவடிக் கமலத்தைப் பூஜிக்கிறேன். சிறந்து விளங்கும் உன்னையே இடைவிடாது தியானிக்கிறேன். ஈசனை உன்னை அடைக்கலம் புகுகின்றேன். உன்னையே வாக்கினால் வேண்டுகிறேன். விண்ணுலகவாசிகளாலும் வேண்டப்படுகிற கருணாகடாக்ஷத்தை (சாக்ஷுஷீ தீக்ஷையை) எனக்கு அளித்து, என் மனத்திற்கும் பூரண உபதேசத்தை அருள்வாய், ஹே ஜகத்குருவே!

**வஸ்த்ரோத்3 தூ4த-விதௌ4 ஸஹஸ்ரகரதா புஷ்பார்சனே விஷ்ணுதா**
**க3ந்தே க3ந்த4 வஹாத்மதா (அ)ன்னபசனே ப3ர்ஹிர்முகா2த்4ய க்ஷதா।**
**பாத்ரே காஞ்சன-க3ர்ப4தாஸ்தி மயி சேத்3 பா3லேந்து3-சூடா3மணே**
**சுச்ரூஷாம் கரவாணி தே பசுபதே ஸ்வாமின் த்ரிலோகீ-கு3ரோ ॥ 30**

இளம்பிறை சிரத்திலணிந்து, பசுவாம் உயிரனைத்துக்கும் அதிபதியாக இருந்து கொண்டு, மூவுலகங்களுக்கும் குருவாக உள்ள இறைவ! உனக்கு ஆடையுடுத்தி உபசரிக்க ஆயிரங்கரங் கொண்ட கதிரவன் தன்மையும், பூக்களைக் கொண்டு பூஜிக்க விஷ்ணுத்தன்மையும், கந்தம் பூசுவதற்கு வாஸனையை ஏற்றிச் செல்லும் வாயுத்தன்மையும், அன்னத்தை நிவேதனம் செய்ய அக்னிமுகங் கொண்ட தேவத்தன்மையும். பூஜைக்குரிய பாத்திரங்களமைக்க ஸ்ருஷ்டிகர்த்தா வான ஹிரண்யகர்ப்பரின் தன்மையும் என்னிடமிருக்குமானால் (அப்போதுதான்) உன்னுடைய வழிபாட்டை செவ்வனே செய்யக்கூடியவனாவேன்!

**நாலம் வா பரமோபகாரக - மித3ம் த்வேகம் பசூனாம் பதே**
**பச்யன் குக்ஷிக3தான் சராசரக3ணான் பா3ஹ்ய ஸ்தி2தான் ரக்ஷிதும்|**
**ஸர்வாமர்த்ய - பலாயநௌஷத4 - மதிஜ்வாலாகரம் பீ4க4ரம்**
**நிக்ஷிப்தம் க3ரலம் க3லே ந கி3லிதம் நோத்3கீ3ர்ண-மேவ த்வயா ||** 31

உயிரினத்தின் தலைவனே! உனது வயிற்றினுள் அடக்கமடைந்துள்ள அசையும் பொருள், அசையாப் பொருள்களையும், அங்ஙனமே வெளியிலுள்ளவை களையும் காப்பாற்றும் பொருட்டு, தீயைக் கக்குவதும், அச்சமளிப்பதும், தேவர்கள னைவரையும் ஓடச்செய்யும் மூலிகை போன்றதுமான விஷத்தை தனது கழுத்திலேயே (உள்ளே விழுங்காமலும், வெளியிலுமிழாமலும் வைத்துக்கொண்டு) உள்ளாயே ! இந்த ஒன்றே உனது பேருபகாரத்திற்கு (அத்தாக்ஷியாய்) போதாதா?

**ஜ்வாலோக்3ர: ஸகலாமராதிப4யத: க்ஷ்வேல: கத2ம்வா த்வயா**
**த்3ருஷ்ட: கிம் ச4 கரே த்4ருத: கரதலே கிம் பக்வ - ஜம்பூ3 - ப2லம் |**
**ஜிஹ்வாயாம் நிஹிதஸ்ச ஸித்3த4 கு4டிகா வா கண்ட2 தே3சே ப்4ருத :**
**கிம் தே நீலமணிர் - விபூ4ஷண - மயம் சம்போ4 மஹாத்மன்வத ||** 32

கடும் ஜ்வாலையுடையதும், எல்லா தேவர்களுக்கும் மிகுந்த அச்சத்தைக் கொடுத்ததுமான விஷத்தை எப்படிக் கண்ணுற்றாய்? உள்ளங்கையில் எங்ஙனம் அதை வைத்துக்கொண்டாய்? அதென்ன பழுத்த நாவல் கனியா? நாக்கில் வைத்துக்கொண்டாயே, அதென்ன ஸித்த குளிகை மருந்தா? கழுத்தில் தரித் தாயே! அதென்ன நீலமணியாலான அணியா? மஹாத்மாவே, சம்புவே! விடை கூறுவாயாக!

**நாலம் வா ஸக்ருதே3வ தே3வ ப4வதஸ் - ஸேவா நதிர் வா நுதி :**
**பூஜா வா ஸ்மரணம் கதா2 ச்ரவண - மப்யாலோகனம் மாத்3ருசாம்|**
**ஸ்வாமின்னஸ்தி2ர - தே3வதானு - ஸரணாயாஸேன கிம் லப்4யதே**
**கா வா முக்தி - ரித: குதோ ப4வதி சேத் கிம் ப்ரார்த்த2னீயம் ததா3 ||** 33

தேவதேவா! ஸ்வாமியே! என் போன்றவர்கள் - கடைத்தேற உனது ஸேவையோ, நமஸ்காரமோ, துதியோ, பூசனையோ, தியானமோ, சரித்திரம் கேட்பதோ தரிசனமோ ஒரு தடவை செய்தாலும் போதாதா? நிலையற்ற தேவதை களை சிரமத்துடன் வழிபடும் பிரயாசை ஏன்? இதைவிட்டு முக்தி என்பது அவர்க ளிடம் வேண்டத்தக்கது யாதுள்ளது?

**கிம் ப்3ரூமஸ் - தவ ஸாஹஸம் பசுபதே கஸ்யாஸ்தி சம்போ4 - ப4வத்3-**
**தை4ர்யஞ் சேத்3ருச - மாத்மன: ஸ்திதி - ரியம் சான்யை: கத2ம் லப்யதே |**
**ப்ர4சயத் தே3வக3ணம் த்ரஸன் - முனிகணம் நச்யத் ப்ரபஞ்சம் லயம்**
**பச்யந் - நிர்ப4ய ஏக ஏவ விஹரத்யானந்த3 - ஸாந்த்3ரோ - ப4வான் ||** 34

சம்போ! பசுபதியே! எக்காலத்தே தேவக்கூட்டம் தன் ஸ்தானத்தில் வந்து விழுமோ, முனிவர்கூட்டம் அச்சமுறுமோ, உலகமே அழியுமோ, அந்த (பிரளய)

காலத்தையும் நோக்குவதன்றி பயப்படாமல் தனித்திருந்து நீ ஆனந்த தாண்டவம் புரிகின்றாயே, உனது துணிவை என்னென்போம்? இத்தகைய தைர்யம் யாருக்கு இருக்கும்? இவ்வித ஆத்மநிலை மற்றவர்களால் எங்ஙனம் அடையக்கூடும்?

**யோக$^3$ க்ஷேம-து$^4$ரந்த$^4$ரஸ்ய ஸகல:ச்ரேய: ப்ரதோ$^3$த்$^3$ யோகி$^3$னோ**
**த்$^3$ருஷ்டாத்$^3$ருஷ்ட-மதோபதே$^3$சக்ருதினோ பா$^3$ஹ்யாந்தர வ்யாபின: |**
**ஸர்வஜ்ஞஸ்ய த$^3$யாகரஸ்ய ப$^4$வத: கிம் வேதி$^3$தவ்யம் மயா**
**சம்போ$^4$ த்வம் பரமாந்த$^3$ரங்க$^3$ இதி மே சித்தே ஸ்மராம்-யன்வஹம் || 35**

சம்போ! நீ அனைவரின் க்ஷேமலாபங்களைத் தாங்குபவன், சிறந்த நன்மைகளை அளிப்பதில் உறுதி கொண்டவன், இஹபரவிருப்பங்களையடையும் வழியை உபதேசிக்கும் குருவானவன், உள்ளும் புறமும் எங்கும் பரவி நிற்பவன், அனைத்தையுமறிகிறவன், கருணைகொண்டவன். அப்படியிருக்க நான் தெரிவிக்க வேண்டியது யாது? நீ என் மனத்துக்குள்ளேயே மிக அந்தரங்கமாக இருப்பவன் என தினமும் உள்ளத்தே நினைத்திருக்கிறேன்.

**ப$^4$க்தோ ப$^4$க்திகு$^3$ணாவ்ருதே முத$^3$ம்ருதா பூர்ணே ப்ரஸன்னே மன:**
**கும்பே$^4$ ஸாம்ப$^3$ தவாங்கரி$^4$-பல்லவயுக$^4$ம் ஸம்ஸ்தா$^2$ப்$^4$ய ஸம்வித்ப$^2$லம் |**
**ஸத்வம் மந்த்ர - முதீ$^3$ரயந் - நிஜசரீராகா$^4$ர - சுத்$^3$தி$^4$ம் வஹன்**
**புண்யாஹம் ப்ரகடீ - கரோமி ருசிரம் கல்யாண - மாபாத$^3$யன் || 36**

தேவியுடன் விளங்குபவனே! உயர்ந்த மங்களத்தைப் பெறுவதற்காக, எனது உடலாகிய வீட்டிற்குத் தூய்மையை விரும்பிச் செய்யப்படும் புண்யாஹ வாசனத்தை பக்தனான யான் வெளியிடுகிறேன். இதற்கு தெளிந்த மனமே குடம், (அது ஸூத்ரம் அணிவிக்கப்பெற்ற புண்யாஹவாசன பாத்திரம்போல்) பக்தியாகிய நூல் சுற்றப்பட்டது, சந்தோஷம் என்னும் நீர் நிரம்பியது. ஒளி பொருந்திய அக்குடத்தில் உனது திருவடிகளாகிய துளிர் இலைகளை (மாவிலை) வைத்து, ஞானம் என்ற தேங்காயை (அதன் மீது இட்டு) ஸத்வகுணத்தை வளரச் செய்யும் பஞ்சாக்ஷர மந்திரத்தை ஜபிக்கிறேன். (வேதமந்திரத்தாலேயே புண்யாஹவாசன தீர்த்தம் புனிதமாக்கப்படும்.)

**ஆம்னாயாம்பு$^3$ தி$^4$-மாத$^3$ரேண ஸுமனஸ் - ஸங்கா$^4$ஸ் - ஸமுத்ய$^3$ன்மனோ -**
**மந்தா$^2$னம் த்$^3$ருட$^4$ ப$^3$க்தி - ரஜ்ஜு ஸஹிதம் க்ருத்வா மதி$^2$த்வா தத: |**
**ஸோமம் கல்பதரும் ஸுபர்வ - ஸுரபி$^4$ம் சிந்தாமணிம் தீ$^4$மதாம்**
**நித்யானந்த$^3$ - ஸுதா$^2$ம் நிரந்தரரமா - ஸௌபா$^4$க்$^3$ய - மாதன்வதே || 37**

பேருள்ளம் படைத்த பக்தர்கள், திடபக்தியென்ற கயிறுகொண்டு, நன்முயற்சி உள்ள மனமாகிய மத்தினால், வேதங்களென்னும் (பாற்) கடலை திட நம்பிக்கை வைத்துக் கடைந்து, அதினின்றும் உமையுடன் கூடியதால் ஸோமன் என்ற சந்திரன் பெயருடையவரும், வேண்டுவதையளிக்கும் கற்பகமாம் காமதேனு போன்றவரும், சிந்தாமணி என்னும் இரத்தினம் போன்றவரும், ஞானிகளுக்கு பேரானந்தமென்னும்

அமிருதமளிப்பவரும், நித்யமான மோக்ஷ லக்ஷ்மி என்னும் செல்வமாகிய பரமசிவத்தைப் பெறுகின்றனர். (சோமனான சந்திரன், கல்பக மரம், காமதேனு, சிந்தாமணி, அமிருதம், லக்ஷ்மி முதலியவை பாற்கடலினின்றே பிறந்தவை.)

**ப்ராக் - புண்யாசல - மார்க$^{3}$ த$^{3}$ர்சித - ஸுதா$^{4}$ மூர்த்தி: ப்ரஸன்ன: சிவ:**
**ஸோமஸ்ஸத்$^{3}$ கு3ண - ஸேவிதோ ம்ருக$^{3}$ தர$^{4}$: பூர்ணஸ்தமோ- மோசக: |**
**சேத: புஷ்கர - லக்ஷிதோ ப$^{4}$வதி சேதா$^{3}$னந்த பாதோ$^{2}$ - நிதி$^{4}$:**
**ப்ராக$^{3}$ல்ப்$^{4}$யேன விஜ்ரும்ப$^{4}$தே ஸுமனஸாம் வ்ருத்திஸ்-ததா$^{3}$-ஜாயதே || 38**

சிலேடை அணியில் - அமைந்த இப்பாடல் இருபொருள் கொண்டதாகும். ஒரு பொருள் சந்திரனை மையமாக வைத்ததாகும். மற்றது சிவனை மையமாகக் கொண்டது.

**முதற் பொருள்:**

கீழைத்திசையிலுள்ள புண்யபர்வதத்தின் வழியே காணப்படும் வெள்ளிமலை, மங்களமான அமுதம் நிறைந்த (களங்க உருவில் உள்ள) மானைத் தாங்குகிற சந்திரன் நக்ஷத்திரங்களோடு உதித்து இருளிலிருந்து முற்றிலும் விடுவித்து, ஒரு தெளிந்த தடாகத்தில் பிரதிபிம்பமிடும்போது ஆழமுற்ற கடலானது பொங்கி எழும்புகிறது. அப்போது தேவர்களுக்குத் தொழில் ஏற்படுகிறது. (சந்திரன் இல்லாத இருளில் அரக்கரே தொழிற்படுவர். நல்ல நிலவிருந்தால்தான் தேவர்கள் உலகில் வெளிவந்து செயலாற்ற முடியும்.)

**இரண்டாவது பொருள்:**

முன் புண்ணியத்தின் வழியாக தரிசிப்பிக்கப்பெறும் அமிருதமூர்த்தியான பிரஸன்ன பரமேச்வரன் உமையோடு கூடி, சந்திரன் கூட்டத்தால் ஸேவிக்கப் பட்டவனாக, மானேந்தித் (சிவனது ஒரு கரத்தில் மான் தரிக்கப்படுகிறது) தோன்றி தமோகுணத்தை முற்றிலும் நீக்கி (பக்தர்) மனத்துள்ளே லக்ஷ்யமாக உணரப்படுகையில் பிரம்மானந்தம் வெளிப்பொங்குகிறது. உயர் மனத்தோரின் இதயத்தில் அப்போது ஒரு (சிறிது) நிலையான பாவனை உண்டாகிறது.

**த$^{4}$ர்மோ மே சதுரங்க்$^{4}$ரிகஸ்-ஸுசரித: பாபம் விநாசம் கத$^{3}$ம்**
**காமக்ரோத$^{4}$-மதா$^{3}$த$^{3}$யோ விக$^{3}$லிதா: காலா: ஸுகா$^{2}$-விஷ்க்ருதா: |**
**ஜ்ஞானானந்த$^{3}$-மஹௌஷதி$^{4}$: ஸுப$^{2}$லிதா கைவல்யநாதே$^{2}$ ஸதா$^{3}$**
**மான்யே மானஸ புண்ட$^{3}$ரீக-நக$^{3}$ரே ராஜாவதம்ஸே ஸ்தி$^{2}$தே || 39**

மதியை முடியில் கொண்டு, எல்லோருடைய மரியாதைக்கு ஏற்றவனாகவும் மோக்ஷ நாயகனாகவும் உள்ளவன் (சிவன்) ஹ்ருதய புண்டரீகமெனும் இதயத் தாமரையாம் நகரத்தில் நிலையாக வீற்றிருப்பானாகில் அறம் நான்கு கால்களுள்ளதாக இருக்கும்*, பாபங்கள் அறவே நீங்கும், காமம், கோபம்

முதலானவை அழிந்துவிடும், எக்காலத்தும் இன்பம் செழிக்கும், ஞானானந்தமெனும் பயிர் நல்ல விளைச்சலையளிக்கும்.

[* கலியுகத்தில் அறம் எனும் பசு ஒரே காலில் நிற்பதாகப் புராணங்கள் கூறும்.]

**தீ4-யந்த்ரேண வசோக4டேன கவிதா-குல்யோப-குல்யாக்ரமை-**
**ரானீதைச்ச ஸதா3 சிவஸ்ய சரிதாம்போ4ராசி-தி3வ்யாம்ருதை: ।**
**ஹ்ருத்கேதா3ரயுதாச்ச பக்தி-கலமா: ஸாப2ல்ய-மாதன்வதே**
**துர்பி4க்ஷான்-மம ஸேவகஸ்ய ப4க3வன் விச்வேச பீதி4: குத: ॥** 40

உலக நாதனான பரமேசா! எனது புத்தியாகிய இயந்திரத்தில் (கிணற்று நாட்டினத்தில்) வாக்காகிய ஏற்றச்சாலைச் சேர்த்து கவிதையாகிய வாய்க்கால், கிளைக்கால் வழியாக எடுத்து வரப்பட்ட ஸதாசிவனின் சரித்திரமாகிய தேவாமிருதத் தண்ணீரைக்கொண்டு ஹ்ருதயமாகிய கழனியில் உதிக்கும் பக்தியாகிய பயிரைப் பயனுள்ளதாகச் (நல்ல விளைச்சலுள்ளதாக) செய்வேனானால், (உனது) அடிமையான எனக்கு (ஆத்மீக) பஞ்சத்தாலுண்டாகும் பயம் எங்ஙனம் ஏற்படும்?

**பாபோத்பாத - விமோசனாய ருசிரைச்வர்யாய ம்ருத்யுஞ்ஜய**
**ஸ்தோத்ர - த்4யான-நதி ப்ரத3க்ஷிண-ஸபர்யாலோகனாகர்ணனே ।**
**ஜிஹ்வா - சித்த - சிரோங்க்4ரி-ஹஸ்த-நயன-ச்ரோத்ரை-ரஹம் ப்ரார்த்தி2தோ**
**மாமாஜ்ஞாபய தந்நிருபய முஹுர்-மாமேவ மாமே(அ)வச: ॥** 41

யமனையும் வென்றவனே! பாபத் துன்பத்தினின்று விடுபடுவதற்காகவும், பூரண சுதந்திரத்தைப் பெறவும் எனது நாக்கும், மனம், தலை, கால், கை, கண், காது என்னும் உறுப்புகளைக் கொண்டு, முறையே உமது துதி, நினைவு, வணங்குதல், வலம் வருதல், அர்ச்சிதல், தரிசனம், சிரவணம் (சிவபெருமானின் மகிமைகளைக் கேட்டல்) என்பவைகளைச் செய்யுமாறு மீண்டும் தினம் எனை அக்காரியங்களில் ஈடுபடச்செய்து, கட்டளை புரிவாயாக! வழி காட்டுவாயாக! என்னிடம் மௌனம் சாதிக்க வேண்டாம்.

**கா3ம்3பீ3ர்யம் பரிகா2பத3ம் க4னத்4ருதி: ப்ராகார உத்3யத்3-கு3ண-**
**ஸ்தோமச்சாப்தப3லம் க4னேந்த்3ரியசயோ த்3வாராணி தே3ஹே ஸ்தி2த: ।**
**வித்யா3-வஸ்து-ஸம்ருத்3தி4ரித்-யகி2ல-ஸாமக்3ரீ ஸமேதே ஸதா3**
**துர்கா3தி ப்ரிய-தே3வ மாமக-மனோ-து3ர்க்கே3 நிவாஸம் குரு॥** 42

கோட்டையினுள் வசிப்பதில் (அல்லது துர்க்காதேவியிடம்) பிரியமுள்ள கடவுளே; எனது மனமாகிய கோட்டை ஆழ்மையை அகழியாயுடையது. நல்ல உறுதியை மதிலாக உடையது. மேலான குணங்களை நட்புள்ள சேனையாயுடையது. ஞானமென்னும் பொருள் (செல்வம்) நிரம்பியது. இத்தகைய எல்லா அங்கங்களுடன் கூடிய இக்கோட்டையில் இடைவிடாது நீ தங்கி வசித்திடுவாய்!

**மா க3ச்ச தவமிதஸ்ததோ கி3ரிச போ4 மய்யேவ வாஸம் குரு**
**ஸ்வாமின்-னாதி-கிராத-மாமகமன: காந்தார-ஸீமாந்தரே |**
**வர்த4ந்தே ப3ஹுசோ ம்ருகா3 மத3 ஜுஷோ மாத்ஸர்ய-மோஹாதயஸ்-**
**தான் ஹத்வா ம்ருக3 யா-விநோத3-ருசிதாலாப4ம்ச ஸம்ப்ராப் - ஸ்யஸி|| 43**

மலையிலமர்ந்துள்ள ஆதிவேடனான தலைவனே! நீ இங்குமங்கும் வேட்டைக் காக அலைய வேண்டாம். எனது மனமாகிய அடர்ந்த காட்டிற்குள், பொறாமை, மதி மயக்கம் முதலான மதங்கொண்ட பற்பல வனவிலங்குகள் இருக்கின்றன. அவைகளை வேட்டையாடி விளையாட்டின் லாபத்தைப் பெறும் பொருட்டு என்னிடமே வசிப்பாயாக!

**கரலக்3னம்ருக3: கரீந்த்ர3 - ப4ங்கோ3**
**க4னசார்தூ3ல-விக2ண்ட3னோ(அ)ஸ்த-ஐந்து: |**
**கி3ரிசோ விசதா3க்ருதிச்ச சேத: குஹரே**
**பஞ்சமுகோ2ஸ்தி மே குதோ பீ4: || 44**

மானைப் பிடித்துக்கொண்டும், கஜா ஸுரனை வென்றும், கொடிய வ்யாக்ரா ஸுரனை பிளந்தும், பிராணிகளனைத்தையும் தன்னிடம் இறப்படையச் செய்தும், மலையிலுறைவதான, பளபளப்பான உருக்கொண்டு பரந்தமுகத்துடன் அல்லது ஐந்து முகத்துடன் கூடிய பரமேச்வரன் என்னும் சிங்கம் எனது மனமாகிய குஹையில் இருக்கிறான். எனக்கு பயமேது? (இது மான், யானை, புலி, மற்ற பிராணி வர்க்கங்களை அழிப்பதும், பரந்த முகம் கொண்டதுமான சிங்கத்திற்கும், மானைக் கையிலேந்தி, கஜாஸுரனையும், தாருகாவன ரிஷிகள் ஏவிய புலியையும் கொன்று, எல்லா உயிர்களையும் ஸம்ஹாரத்தில் தன்னிடம் ஒடுக்கிக்கொள்ளும் சிவனுக்கும் பொருந்துமாறு சிலேடையாயமைந்த சுலோகம். சிங்கமாகக் கொள்கையில் "பஞ்சாஸ்யம்" என்றால் 'பரந்தமுகமுடையது' என்று பொருள்; அதுவே சிவனாகக் கொள்கையில்'ஐந்து முகம்'கொண்டவன் எனப் பொருள்படும்).

**ச2ந்த3: சாகி2- சிகா2ன்விதைர் - த்3விஜவரை: ஸம்ஸேவிதே சாச்வதே**
**ஸௌக்2யாபாதி3னி கே2த3 - பே2தி3னி ஸுதா4ஸாரை: ப3லைர் - தீ3பிதே |**
**சேத: புக்ஷிசிகா2மணே த்யஜ வ்ருதா2 - ஸஞ்சார - மன்யை - ரலம்**
**நித்யம் சங்கர - பாத3 - பத்3ம - யுக3ளீ - நீடே3 விஹாரம் குரு || 45**

மனமாகிய சிறந்த பறவையே! நீ வீணாக இங்குமங்கும் அலைவதைவிட்டு உனக்காக உள்ள கூட்டில் சுகமாக நிரந்தரமாக விளையாடு. அக்கூடு வேதங்க ளாகிய மரக்கிளையின் உச்சியில் (உபநிஷத்தில்) உள்ளது. இருபிறப்பாளர்களாகிய பறவைகளால் நாடப்பெற்றது. துன்பத்தைப் போக்கி இன்பத்தையளிக்க வல்லது. அமிருதத்திற்கு நிகரான பழங்களால் நிரம்பியது. (அதாவது அமர நிலையைப் பயனாக அளிப்பது.) அதுதான் பரமசிவனது திருவடித்தாமரைகளாகிய கூடு. (சாகை என்பது மரக்கிளை, வேதசாகை இரண்டுக்கும்; த்விஜ என்பது பக்ஷி, இருபிறப்பாளர் இரண்டுக்கும் சிலேடையாகக் கூறப்பட்டுள்ளது.)

**ஆகீர்ணே நக2ராஜி - காந்தி - விப4வை - ருத்3யத்ஸுதா4 - வைபவை -**
**ராதௌ4தேபி ச பத்3மராக3 - லலிதே ஹம்ஸ - வ்ரஜை - ராச்ரிதே |**
**நித்யம் ப4க்தி - வதூ4க3ணைச்ச ரஹஸி ஸ்வேச்சா2 - விஹாரம் குரு**
**ஸ்தி2த்வா மானஸ-ராஜஹம்ஸ கி3ரிஜா - நாதாங்க்4ரி - ஸௌதா4ந்தரே|| 46**

மனமாகிய ராஜஹம்ஸமே! நீ நகங்களினின்று வீசும் ஒளியால் தீபம் உள்ளதும், சந்திரகலையினால் வெள்ளையடிக்கப்பட்ட தான பத்மராகக்கற்கள் இழைத்தாற் போன்று சிவந்து காணப்படுவதும், பரமஹம்ஸர்கள் என்னும் சிறந்த அன்னப்பறவைகள் நிரம்பியதுமான மலை மகளின் நாதரது திருவடிகளாகிய மாளிகையில் பக்தி எனும் மனைவியாருடன் சாச்வதமாக தன்னிச்சைப்படி கூடிக் குலாவுவாயாக.

**சம்பு4த்4யான - வஸந்த - ஸங்கி3னி ஹ்ருதா3ராமே (அ)க4 ஜீர்ணச்ச2தா:**
**ஸ்ரஸ்தா ப4க்திலதாச்ச2டா - விலஸிதா: புண்யப்ரவால - ச்ரிதா: |**
**தீ3ப்யந்தே கு3ணகோரகா ஜபவச: - புஷ்பாணி ஸத்3வாஸனா**
**ஜ்ஞானானந்த3- ஸுதா4- மரந்த3 - லஹரீ ஸம்வித்ப2லா(அ)ப்-யுந்நதி: || 47**

நமது மனமாகிய பூந்தோட்டத்தில் சிவனது தியானமெனும் வஸந்த பருவம் நேரிடுகையில் பாபமெனும் பழுத்த இலைகள் உதிர்ந்துவிடும். பக்தியெனும் கொடிக்கூட்டங்கள் சிறந்து பிரகாசிக்கும். புண்ணியமென்னும் தளிர்கள் தோன்றும். நற்குணமென்னும் அரும்புகள் கட்டும். ஜப மந்திரங்களாகிய பூக்களும் மலரும், நறுமணம் வீசும். (நற்கர்ம புண்ய வாஸனை கூடும்.) ஞானானந்தமென்னும் அமுதம் போன்ற தேன் பெருகும். ஞானானுபவமாகிய சிறந்த பழங்கள் விருத்தியாகும்.

**நித்யானந்த3-ரஸாலயம் ஸுரமுனிஸ்வாந்தாம்பு3-ஜாதாச்ரயம்**
**ஸ்வச்ச2ம்-ஸத்3-த்3விஜஸேவிதம் கலுஷ-ஹ்ருத்-ஸத்3 வாஸனா-விஷ்க்ருதம் |**
**சம்பு4த்4யான-ஸரோவரம் வ்ரஜ மனோ-ஹம்ஸாவதம்ஸ ஸ்தி2ரம்**
**கிம் க்ஷத்3ராச்ரய-பல்வல-ப்4ரமண-ஸஞ்ஜாத-ச்ரமம் ப்ராப்ஸ்யஸி || 48**

மனமென்னும் சிறந்த அன்னமே! ஏன் சிறியோரை அடுத்து நின்று, சேற்றுக் குட்டையில் உழன்று வீணாகக் கஷ்டப்படுகிறாய்? அழிவற்றதான ஆனந்தமென்னும் நீர் நிரம்பியதும், தேவ ரிஷிகளின் இதயமாகிய தாமரையுள்ளதும், தெளிந்த ஸாதுக்களாகிய பக்ஷிகளினால் நாடப்படுவதும், பாபமென்ற மாசையகற்றி புண்ணியமெனும் நறுமணத்தை வெளிப்படுத்துவதுமான சிவத்யானம் என்ற மேலான நீர்நிலயத்தை நிலையான இடமாக அடைவாயாக.

**ஆனந்தா3ம்ருத-பூரிதா ஹரபதா3ம்போ4ஜாலவாலோத்3யதா**
**ஸ்தை2ர்யோபக்4ன-முபேத்ய ப4க்திலதிகா சாகோ2பசாகான் விதா |**
**உச்சை2ர்-மானஸ-காயமானபடலீ-மாக்ரம்ய நிஷ்கல்மஷா**
**நித்யாபீ4ஷ்ட-ப2லப்ரதா3ப4வது மே ஸத்கர்ம-ஸம்வர்தி4தா || 49**

சிவனது ஆனந்தமாகிய அமுத நீரால் வளர்க்கப்பட்டு. பாதபத்மமாகிய பாத்தியில் முளைத்து, திடச்சித்தமெனும் கொழுகொம்பைப் பற்றிக்கொண்டு, பெருங்கிளை, சிறுகிளைகளோடு கூடி, சிறந்தவர்களின் மனமெனும் பந்தலில் படர்ந்து, பூச்சியென்ற குற்றமற்று, நற்செய்கைகளால் நன்கு வளர்க்கப்பட்ட பக்தியெனும் கொடி எனக்கு நிலையான முக்தியென்ற விரும்பத்தக்க பழத்தை யளிப்பதாக ஆகட்டும்.

**ஸந்த்4யாரம்ப4-விஜ்ரும்பி4தம் ச்ருதிசிரஸ்தா2னாந்த-ராதி4ஷ்டிதம்**
**ஸப்ரேம-ப்4ரமராபி4ராம-மஸக்ருத் ஸத்3வாஸனா-சோபி4தம் ।**
**போ4கீ3ந்த்5ராப4ரணம் ஸமஸ்த-ஸுமன: பூஜ்யம் கு3ணாவிஷ்க்ருதம்**
**ஸேவே ஸ்ரீகி3ரி-மல்லிகார்ஜுன-மஹாலிங்க3ம் சிவாலிங்கி3தம் ॥** 50

(இங்கே மல்லிகார்ஜுன மஹாலிங்கேச்வரருக்கும், மல்லிகைக் கொடி படர்ந்த (மருத) மரத்திற்கும் சிலேடை உள்ளது. கொடி போன்ற தேவியால் தழுவப்படும் ஸ்தாணுவான (படடகட்டை போன்ற) ஈச்வரன் மல்லிகைக்கொடி போன்ற மருதமரத்துக்கு ஒப்பாகிறான்.)

மருதமரம் கொள்கையில் இதன் பொருள் வருமாறு:

ஸ்ரீசைலத்தில் பெரியதும், அடையாளமாக உள்ளதும், மங்களமான (கொடியால்) தழுவப்பட்டதும், மாலைத் தொடக்கத்தே மலர்வதும், காதின் மேலும் தலையிலும் அணியக்கூடிய பூவை உடையதும், தேன் வண்டுகள் அன்போடு சூழ அழகுற்று விளங்குவதும், நல்ல வா ஸனையினால் சோபிப்பதும், போகத்தை விரும்பு வோருக்கு அலங்காரப் பொருள்களைத் தருவதும், எல்லாப் புட்ப மரங்களிலும் மேன்மை பெற்றதும், உயர்ந்த தரமுள்ளதுமான மல்லிகையோடு கூடிய மருதத்தைப் பெற்றிருக்கிறது.

சிவபெருமானுக்குரிய கொள்கையில் இதன் பொருள்:

மாலையின் தொடக்கத்தில் நடனத்தால் களிப்புற்றவரும், வேதமுடியாகிய உபநிடதங்களில் நிலையாகத் தோன்றுபவரும், அன்புகொண்ட ப்ரமராம்பிகையுடன் விளங்குகிறவரும், எப்பொழுதும் சாதுக்களது பக்தி மணம் கமழ்பவரும், சிறந்த பாம்புகளை அணியாக அணிந்தவரும், தேவர்களனைவராலும் பூஜிக்கப்பட்டவரும், நற்குணங்களை வெளியிடுபவரும், பராசக்தியால் தழுவப்பட்டவரு மான ஸ்ரீ சைலத்தின்மேல் விளங்கும் மல்லிகார்ஜுனர் என்ற மஹாலிங்க மூர்த்தியை இடைவிடாது ஸேவிக்கிறேன்.

**ப்4ருங்கீ3ச்சா-நடனோத்கட: கரிமத3க்3ராஹீ ஸ்பு2ரன் மாத4வா-**
**ஹ்லாதோ3 நாத3யுதோ மஹாஹிதவபு: பஞ்சேஷுணா சாத்3ருத: ।**
**ஸத்பக்ஷஸ்-ஸுமனோவனேஷு ஸ புன: ஸாக்ஷான்மதீ3யே மனோ**
**ராஜீவே ப்ர4மராதிபோ4 விஹரதாம் ஸ்ரீசைலவாஸீ விபு4: ॥** 51

ப்ருங்கி எனும் ரிஷியினது விருப்பத்தை நிறைவேற்ற நடனத்தை மேற்கொண்டவரும், கஜாஸுரனது மதத்தை ஒடுக்கியவரும், மோஹினி உருவெடுத்த விஷ்ணுவின் வடிவத்தில் மகிழ்ச்சியடைந்தவரும், ப்ரணவ ரூபியும், மிகவும் வெளுத்து விளங்கும் சரீரமுடையவரும், மன்மதனது பாணங்களுக்கு இலக்கானவரும், விண்ணோர்களைக் காக்க ஆவலுள்ளவரும், எங்கும் நிறைந்தவரும், ஸ்ரீசைலத்தில் ப்ரமராம்பிகையைத் துணைவியாகக் கொண்டு கோயில் கொண்டிருப்பவருமான மல்லிகார்ஜுனர் பிரத்யக்ஷமாக எனது மனதாகிய தாமரையில் விளையாடட்டும்.

இதற்குச் சிலேடையாக இன்னொரு பொருள்:

பெண்வண்டின் இச்சைக்கேற்பச் சுற்றுவதில் விருப்பமுள்ளது, யானையின் மதநீரைப் பருகுவதும், பிரகாசிக்கும் வஸந்த ரிதுவில் மகிழ்வதும், ரீங்காரத்துடன் கூடியது, மிகக் கரிய உடலுடையதும், மன்மதனால் (அவனது க்ரும்பு வில்லுக்கு நானாக ஆதரிக்கப்பட்டதும், பூந்தோட்டங்களில் மிக்க ஆசைகொண்டதும், அழகு நிறைந்த மலையில் வசிப்பதும், எங்கு செல்கிறதுமாகிய இந்த அரச வண்டு மீளமீள நேரக என் மனத்தாமையின் விளையாடுமாக!

**காருண்யாம்ருத-வர்ஷிணம் க4ன விபத்2-க்3ரீஷ்மச்சி2தா3-கர்மட2ம்**
**வித்3யா-ஸஸ்ய-ப2லோத3யாய ஸுமனஸ்ஸம்ஸேவ்ய-மிச்சா2-க்ருதிம் ।**
**ந்ருத்யத்ப4க்த-மயூர-மத்3ரி-நிலயம் சஞ்சஜ்ஜடா-மண்ட3லம்**
**சம்போ4 வாஞ்ச2தி நீலகந்த4ர ஸதா3 தவாம் மே மனச்சாதக: ॥** 52

நீலகண்டரே! நீங்கள் கருணை யென்ற அமுதத்தைப் பொழிபவர்; தாபங்களாகிய கோடையில் பக்தர்களைக் குளிர வைப்பவர்; வித்தையென்னும் பயிர்களின் விளைச்சலையளிக்கும் பொருட்டுத் தூய்மையுள்ளத்தவர்களால் போற்றப் படுபவர்; விரும்பிய உருவமெடுப்பவர்; ஆனந்தநடனம் புரியும் பக்தர்களாகிய மயில்களை உடையவர்; மலையில் வசிப்பவர்; அசைந்தாடும் சடைகளாகிற மின்னலை உடையவர். உங்களை எனது மனதாகிய சாதகப்பறவை இடைவிடாது காண ஆவலுடன் விரும்பி நிற்கிறது. (இங்கே சிவபெருமான் மேகக்தோடு உவமிக்கப்படுகிறார்.)

**ஆகாசேன சிகீ2 ஸமஸ்த-ப2ணினாம் நேத்ரா கலாபீ நதா**
**(அ)னுக்2ராஹி-ப்ரணவோபதே3ச-நினதை3-கேகீதி யோ கீ3யதே ।**
**ச்யாமாம் சைலஸமுத்2ப4வாம் க4னருசிம் த்3ருஷ்ட்வா நடந்தம் முதா3**
**வேதா3ந்தோபவனே விஹார-ரஸிகம் தம் நீலகண்டம் ப4ஜே ॥** 53

கருத்த கழுத்தையுடைய மயில்போன்ற நீலகண்டனை சரணமடைகிறேன். (நீலகண்ட என்பது மயிலுக்கும் பெயராகும்; ஆதலால் நெஞ்சரான சிவனுக்கும் பெயராகும்.) இம்மயிலுக்கு ஆகாயமே கொண்டை; பாம்புத்தலைவனான ஆதிஷேன் கண்ணுள்ல தோகை; தன்னை அடைக்கலம் புகுந்தவர்களுக்குச் செய்யும் ப்ரணவ உபதேசமே "கேகா" என்னும் மயிலின் குரல் ஒலி. மலைமகள் என்னும்

மேகத்தைக்கண்டு மகிழ்ச்சிக்கொண்டு நடனம்புரிந்து, வேதாந்தமென்ற தோட்டத்தில் ரசித்து விளையாடுவது இம்மயில்.

**ஸந்த்4யா-க4ர்ம-தி3னாத்யயோ ஹரிகராகா4த-ப்ரபூ4 தானக**
**த்4வானோ வாரித3 க3ர்ஜிதம் தி3விஷதாம்3 த்3ருஷ்டிச் ச3டா சஞ்சலா ।**
**ப4க்தானாம் பரிதோஷ-பா3ஷ்ப3-விததிர்-வ்ருஷ்டிர்-மயூரீ சிவா**
**யஸ்மின்னுஜ்வல-தாண்ட3வம் விஜயதே தம் நீலகண்ட2ம் பஜே ॥** 54

இந்த சிவன் என்ற மயில், மாலை நேரத்தை மாரிக்காலமாகவும், மஹாவிஷ்ணுவின் மிருதங்க ஒலியை மேகத்தின் கர்ஜனையாகவும், தேவர்களது கண்ணோக்குகளை மின்னலாகவும், அடியார்களது ஆனந்தக்கண்ணீரை மழையாகவும், பார்வதியை பெண்மயிலாகவும் கொண்டு பிரகாசமாகத் தாண்டவமாடி மகிழ்கிறது. இப்படிப்பட்ட நீலகண்டமயிலை நான் ஸேவிக்கிறேன்.

**ஆத்3யாயாமித-தேஜஸே ச்ருதிபதை3ர்-வேத்3யாய ஸாத்3யாய தே**
**வித்3யானந்த3-மயாத்மனே த்ரிஜகதஸ்ஸம்ரக்ஷணோத்3 யோகி3னே ।**
**த்4யேயாயாகி2ல-யோகி3 பி4ஸ்ஸுரக3ணைர்-கே3யாய மாயாவினே**
**ஸம்யக் தாண்ட3வஸம்ப்ர4மாய ஜடினே ஸேயம் நதி: சம்ப4வே ॥** 55

அனைத்திற்கும் ஆதியும், அளவுகடந்த ஜோதியும், மறைகளால் அறியப் படுபவரும், ஸாத்யமெனும் லக்ஷ்ய வஸ்துவும், பேரறிவு - பேரானந்த உருவினரும், மூவுலகத்தைக் காப்பதில் உறுதிகொண்டவரும், ஸதா யோகிகளால் தியானிக்கப் படுபவரும், தேவர்களால் பாடப்படுபவரும், மாயையை வயப்படுத்தியவரும், விரித்த சடையுடன் தாண்டவமாடி மங்களத்தையளிப்பவருமான சம்புவான உமக்கு இந்த வணக்க முரித்தாகுக.

**நித்யாய தரிகு3ணாத்மனே புரஜிதே காத்யாயனீச்ரேயஸே**
**ஸத்யாயாதி3-குடும்பி3னே முனிமன: - ப்ரத்யக்ஷ-சின்மூர்த்தயே ।**
**மாயாஸ்ருஷ்ட-ஜக3த்-த்ரயாய ஸகலாம்-னாயாந்த-ஸஞ்சாரிணே**
**ஸாயம் தாண்ட2வஸம்ப்4ரமாய ஜடினே ஸேயம் நதி: சம்பவே ॥56**

நித்ய வஸ்துவாயும், முக்குணவடிவம் கொண்டவராயும், முப்புரத்தை வென்றவராயும், பார்வதியின து பெரும் பேறானவராகவும், ஸத்தியராயும், முனிவர்களுள்ளத்தே பிரத்யக்ஷமாக விளங்கும் ஞானமூர்த்தியும், மாயையைக கொண்டு மூவுலத்தையும் தோன்றச்செய்பவராயும், வேதங்களின் உட்கருத்தென விளங்கிக்கொண்டிருப்பவராகவும், மாலை நேரத்தே விரித்த சடையுடன் தாண்ட வத்தை மேற்கொள்பவராகவுமுள்ள சம்புவுக்கு இந்த வணக்கம் உரித்தாகுக.

**நித்யம் ஸ்வோதா3- போஷணாய ஸகலானுத்3தி3ச்ய வித்தாசயா**
**வ்யர்த்த2ம் பர்யடனம் கரோமி ப4வத: ஸேவாம் ந ஜானே விபோ4 ।**
**மஜ்ஜன்மாந்தர-புண்யபாக-ப3லதஸ்-த்வம் சர்வ ஸர்வாந்தரஸ் -**
**திஷ்ட2ஸ்யேவ ஹி தேன வா பசுபதே தே ரக்ஷணீயோஸ்-ம்யஹம் ॥ 57**

அடியார்களது பாவத்தைப்போக்குவதால் "சர்வர்" எனப்படுபவரே! எங்கும் நிறைந்த விபுவே! எனது வயிற்றை வளர்க்கவே செல்வத்திலாசை கொண்டு பலரையும் நாடி வீணாக அலைகின்றேன், (இதுவரை) உன் சேவையை அறிந்தேனில்லை. (இப்பொழுதுதான்) எனது முற்பிறவிகளில் செய்த புண்ணியம் பழுத்துப் பலன் தந்த அனைத்துள்ளும் உறைபவராக உம்மையறிந்தேன். ஆகவே உம்மால் காப்பாற்றப்பட வேண்டியவனாகிறேன்.

**ஏகோ வாரிஜ-பா3ந்த4வ: க்ஷிதிநபோ4-வ்யாப்தம் தமோ - மண்ட3லம்**
**பித்4வா லோசன-கோ3 சரோபி ப4வதி தவம் கோடிஸூர்ய-ப்ரப4: ।**
**வேத்3ய: கிந்ந ப4வஸ்யஹோ க4னதரம் கீத்3ருக்3ப4வேன்-மத்தமஸ்-**
**தத்ஸர்வம் வ்யபனீய மே பசுபதே ஸாக்ஷாத் ப்ரஸன்னோ ப4வ ॥ 58**

பசுபதியே! தினமும் புறத்தே உள்ள இருளை விலக்கும் தாமரைத் தோழனான ஒரு கதிரவன் கண்ணுக்குப் புலப்படுகிறான். நீங்கள் கோடி சூரிய ஒளி படைத்தவர். ஆயினும், என் கண்களுக்கு ஏன் புலப்படாமலிருக்கிறீர்கள்? அந்தோ என் அஞ்ஞான இருள் எவ்வளவு கனமானதாயிருக்கவேண்டும்? அதனை அறவே நீக்கி என் கண்ணெதிரே பிரசன்ன மாவீர்!

**ஹம்ஸ: பத்3மவனம் ஸமிச்ச2தி யதா2 நீலாம்பு3த3ம் சாதக:**
**கோக: கோகநத3 ப்ரியம் ப்ரதிதி3னம் சந்த்ர2ம் சகோரஸ்ததா2 ।**
**சேதோ வாஞ்ச2தி மாமகம் பசுபதே சின்மார்க3-ம்ருக்3யம் விபோ4**
**கௌ3ரீநாத2 ப4வத் பதாப்ஜ-யுக3ளம் கைவல்ய-ஸௌக்ய2-ப்ரத3ம் ॥ 59**

பசுபதியான பார்வதி மணாளனே! விபுவே! எவ்வாறு அன்னம் தாமரைத் தடாகத்தையும், சாதக பக்ஷி கார்மேகத்தையும், சக்ரவாகப் பறவை கதிரவனையும் சகோரப் புள் சந்திரனையும் விரும்பி நிற்கின்றனவோ, அங்ஙனமே என் மனம் ஞான மார்க்கத்தால் நாடக்கூடியதும், மோக்ஷத்தையளிக்கவல்லதுமான உமது திருவடித் தாமரைகளை நாடோறும் விரும்பி நிற்கிறது.

**ரோத4ஸ்-தோயஹ்ருத: ச்ரமேணபதிகச்-சாயாம்தரோர்-வ்ருஷ்டித:**
**பீ4த: ஸ்வஸ்த2-க்2ருஹம் க்2ருஹஸ்த-மதிதி2ர்-தீ2ன: ப்ரபு4ம் தா4ர்மிகம் ।**
**தீ3பம் ஸந்தமஸாகுலச்ச சிகி2னம் சீதாவ்ருதஸ்-த்வம் ததா2**
**சேதஸ்-ஸர்வ ப4யாபஹம் வ்ரஜ ஸுகம் சம்போ4: பதாம்-போருஹம் ॥ 60**

மனமே! வெள்ளத்தில் சிக்குண்டவன் கரையையும், வழிப்போக்கன் மர நிழலையும், மழைக்கு அஞ்சியவன் சொஸ்தமான வீட்டையும், விருந்தாளி

இல்லறத்தானையும், ஏழையானவன் தருமச்சித்தங்கொண்ட செல்வந்தனையும், இருளில் துன்புற்றவன் விளக்கையும், குளிரால் வாடுபவன் நெருப்பையும் எப்படி அடைய விரும்புவானோ, அம்மாதிரியே நீ (மனம்) அச்சத்தையகற்றி இன்பத்தை யளிக்கும் சம்புவின் திருவடித்தாமரையை விரும்பி நிற்பாயாக!

**அங்கோலம் நிஜபீ3ஜஸந்த்தி-ரயஸ்காந்தோபலம் ஸூசிகா**
**ஸாத்4வீ நைஜவிபு4ம் லதா க்ஷிதிருஹம் ஸிந்து3ஸ்-ஸரித்2-வல்லப4ம் ।**
**ப்ராப்னோதீஹ யதா2 ததா2 பசுபதே: பாதா3ரவிந்த3-த்3வயம்**
**சேதோவ்ருத்தி-ருபேத்ய திஷ்ட2தி ஸதா3 ஸா ப4க்திரித்-யுச்யதே ॥ 61**

ஏறழிஞ்சல் என்னும் மரத்தை அதன் விதைகள் போலும், காந்தக்கல்லை ஊசி போலவும், தனது மணவாளனைப் பதிவ்ரதை போன்றும், மரத்தைக் கொடி போலவும், கடலை நதி போலவும். ஒருவனது உள்ளத்தின் ஓட்டம் பரமசிவனது திருவடித்தாமரையை நாடி எப்போதும் நிலைபெற்றிருந்தால் அதுவே பக்தி எனப்படும். (ஏறழிஞ்சில் மரத்தின் விதைகள் பூமியில் விழுந்த பின், ஊர்ந்து சென்று மீண்டும் அம்மரத்திலேயே ஒட்டிக் கொள்ளும்.)

**ஆனந்தா3ச்ருபி4-ராதனோதி புலகம் நைர்மல்யதச்-சா2தனம்**
**வாசா சங்க1முகே2 ஸ்திதைச்ச ஜட2ராபூர்த்திம் சரித்ராம்ருதை: ।**
**ருத்3ராக்ஷைர்-ப4ஸிதேன தே3வ வபுஷோ ரக்ஷாம் ப4வத்-பா4வனா-**
**ப4ர்யங்கே விநிவேச்ய ப4க்தி-ஜனனீ ப4க்தார்ப4கம் ரக்ஷதி ॥ 62**

மஹா தேவா! நினது பக்தியாகிய தாய், பக்தனான குழந்தையை ஆனந்தக்கண்ணீரைக் கொண்டு மயிர்க்கூச்சல் ஏற்படும்படி குளிப்பாட்டி, மாசற்ற மனமென்னும் ஆடையுடுத்தி, வாக்கு என்னும் சங்கத்தின் (பாலாடையினை) வாயிலாக நினது சரித்திர மெனும் அமிருதத்தை நிறைய அருந்தச் செய்து, ருத்ராக்ஷ மாலை, விபூதிகளைக்கொண்டு உடல் ரக்ஷை செய்து, தியானமாகிய தொட்டிலில் படுக்கவைத்துக் காக்கிறாள்.

**மார்கா3வர்தித-பாது3கா பசுபதே-ரங்கஸ்ய கூர்சாயதே**
**க3ண்டூ3ஷாம்பு3-நிஷேசனம் புர-ரிபோர்-திவ்யாபி4ஷேகாயதே ।**
**கிஞ்சித்3ப4க்ஷித-மாம்ஸசேஷகப3லம் நவ்யோபஹாராயதே**
**ப4க்தி: கிம் ந கரோத்யஹோ வனசரோ ப4க்தாவதம்ஸாயதே ॥ 63**

வழிநடந்து தேய்ந்த (கண்ணப்பனின்) பாதரக்ஷை பசுபதியான உனக்கு சிரசில் வைக்கப்படும் கூர்ச்சமாகிறது. (அந்தக் கண்ணப்பன்) வாயிலிருந்து உமிழ்ந்த நீர் முப்புரமெரித்த உனக்கு திவ்விய அபிஷேகமாகிறது. (அவன்) சிறிது உண்டு மிச்சமான மாமிசக் கவளம் புதிதாக உண்டாக்கிய நைவேத்ய மாகிறது. (இவற்றையளித்த) வேடனும் சிறந்த அடியானாகிறான், ஆச்சர்யம்! பக்தி எதைத்தான் செய்யாது?

**வக்ஷஸ்தாடன-மந்தகஸ்ய கடி2னாபஸ்மார-ஸம்மர்த2னம்**
**பூ4ப்4ருத்-பர்யடனம் நமத்ஸுரசிர:-கோடீர-ஸங்க4ர்ஷணம் ।**
**கர்மேத3ம் மருது3லஸ்ய தாவகபத3த்வந்த்3 வஸ்ய கௌரீபதே**
**மச்சேதோ-மணி-பாது3 காவிஹரணம் சம்போ4 ஸதா2ங்கீ குரு ॥ 64**

உமாபதியே! மென்மையான உனது இணையடிகளுக்கு யமனது மார்பில் உதைப்பது; அஞ்ஞானமென்ற கடினமான அபஸ்மாரத்தை மிதிப்பது; (கைலாய) கிரியில் அலைவது, வணங்கும் தேவர்களது கிரீடங்களில் உறைவது ஆகிய இவை தொழிலாயுள்ளது. (அவற்றால் ஏற்படும் வேதனையை விலக்க) எனது மனமாகிய இரத்தினப் பாதுகையை அங்கீகரித்து, அதனையணிந்துகொண்டு சஞ்சரிப்பீராக.

**வக்ஷஸ்தாட3ன-சங்கயா விசலிதோ வைவஸ்வதோ நிர்ஜரா:**
**கோடீரோஜ் ஜ்வல-ரத்னதீ3 பகலிகா-நீராஜனம் குர்வதே ।**
**த்3ருஷ்ட்வா முக்திவதூ4ஸ்-தனோதி நிப்4ருதாச்லேஷம் ப4வானீபதே**
**யச்சேதஸ்-தவ பாத3 பத்2ம-ப4ஜனம் தஸ்யேஹ கிம் து3ர்லப3ம் ॥ 65**

பவானிபதியே! (உனது திருவடித் தாமரையைக் கண்டு) மார்பில் உதை விழுமோ என ஐயுற்று யமன் ஓடுகிறான். (வணங்குங்கால்) தேவர்கள் கிரீடங்களில் பதிக்கப்பட்ட மொட்டு போன்ற ரத்னங்களாகிய தீபங்களால் ஆரத்தி எடுக்கிறார்கள். எவனது உள்ளம் உன் திருவடிகளின் சேவையைப் புரிகிறதோ அவனுக்கு இங்கு அடையவொண்ணாதது எதுவுண்டு? அவனைக் கண்டதும் முக்தியென்னும் பெண் இறுகத் தழுவிக்கொள்கிறாள்.

**க்ரீடா3ர்த்த2ம் ஸ்ருஜஸி ப்ரபஞ்ச-மகி2லம் க்ரீடா3ம்ருகா3ஸ்தே ஜனா:**
**யத்கர்மாசரிதம் மயா ச ப4வத: ப்ரீத்யை பவத்யேவ தத் ।**
**சம்போ4 ஸ்வஸ்ய குதூஹலஸ்ய கரணம் மச்சேஷ்டிதம் நிச்சிதம்**
**தஸ்மான்-மாமக-ரக்ஷணம் பசுபதே கர்த்தவ்ய-மேவ த்வயா ॥ 66**

சம்பவே! இவ்வுலகனைத்தையும் உமது விளையாட்டுக்காகப் படைக்கிறீர். ஸகல பிராணிகளும் உம் விளையாட்டிற்காக உள்ள பொம்மைகள். (அவர்களில் ஒருவனான) நான் செய்வதனைத்தும் கூட உமது ப்ரீதிக்காகவே ஆகிறது. உமது அடியார்களின் சந்தோஷத்திற்காகவே என்னை ஆட்டுவிப்பதும் காரணமாகிறது. ஆகவே, (வளர்ப்புப் பிராணிபோன்ற) என்னைக் காத்தல் உமது கடமையாகிறது.

**ப3ஹுவித4-பரிதோஷ-பா3ஷ்பபூர்-**
**ஸ்பு2ட-புலகாங்கித-சாரு-போக-பூ4மிம் ।**
**சிரபத2-ப1லகாங்க்ஷி-ஸேவ்யமானாம்**
**பரமஸதா3 சிவ-பா4வனாம் ப்ரபத்3யே ॥ 67**

நிலையான பதவியென்ற மோக்ஷத்தையடைய விரும்புகிறவர்களால் போற்றப்படும் மேலான சதா சிவத்தியானத்தை அடைக்கலம் புகுகிறேன். (ஏனெனில் அந்த தியானம்) பற்பலவிதமான இன்பத்தால் ஆனந்தக்கண்ணீர் பெருக்குவதற்கும், வெளிப்படையாக மயிர்க்கூச்சுண்டாவதற்கும் நல்ல விளை நிலமாக உள்ளது.

**அமித-மு3தம்ருதம் முஹுர்-து3ஹந்தீம்**
**விமல-ப4வத்பத3-கோ3ஷ்ட2-மாவஸந்தீம் ।**
**ஸத3ய பசுபதே ஸுபுண்ய பாகாம்**
**மம பரிபாலய ப4க்திதே4னு-மேகாம் ॥** 68

உயிர்களின் தலைவரே! தயை நிறைந்தவரே! எனது பக்தியென்ற பசுவை மாத்திரம் காத்தருளுங்கள். அப்பசு பேரின்பம் என்ற அளவற்ற அமுதத்தை மேன்மேலும் பெருக்கும். உமது திருவடிகள் என்ற பரிசுத்தமான கொட்டிலில் வசிக்கும்; சிறந்த புண்யத்தின் பயனாகத் தோன்றும்.

**ஜட3தா பசுதா கலங்கிதா**
**குடிலசரத்வம் ச நாஸ்தி மயி தே3வ ।**
**அஸ்தி யதி3 ராஜமௌலே**
**ப4வதா3ப4ரணஸ்ய நாஸ்மி கிம் பாத்ரம் ॥** 69

மதியை சிரத்தில் அணிந்தவனே! என்னிடம் ஜடத்தன்மை, மிருகத் தன்மை, களங்கமுள்ள தன்மை, கோணலான தன்மை இவை ஒன்றும் இல்லையே. இவை ஏதாவது என்னிடம் இருக்குமாயின் உனது சித்தத்தில் அணியாக இருக்க நானும் பாத்திரனாயிருக்க மாட்டேனா? (ஸம்ஸ்கிருதத்தில் ‘ஜலம்' என்பது 'ஜடம்' என்றும் மாறும். எனவே, ஜடத்தன்மை என்பது பனியைப் பெருக்குவதாகக் கருதப்படும் சந்திரனின் ஜலத்தன்மையைக் குறிப்பதுமாகும். 'மிருகம்' எனப்படும் மானின் அடையாளம் சந்திரனுள் இருப்பதால் சந்திரனுக்கு மிருகத்தன்மை உள்ளது. அதையே களங்கம் என்றும் சொல்கிறோம். பெருமான் அணிவது பூர்ண சந்திரனாக இன்றிப் பிறையாக இருப்பதால் அது கோணலானது எனப்படுகிறது.)

**அரஹஸி ரஹஸி ஸ்வதந்த்ர-பு3த்4யா**
**வரிவஸிதும் ஸுலப4: ப்ரஸன்ன-மூர்த்தி: ।**
**அக3ணித-ப2லதா3யக: ப்ரபு4ர்-மே**
**ஜக3த்2தி4கோ ஹ்ருதி3 ராஜசேக2ரோஸ்தி ॥** 70

பிறைசூடியபெருமான் மனத்தை வசப்படுத்தியவர்களால் உள்ளத்தும் புறத்தும் ஆராதிக்கக்கூடியவர்; தெளிந்த உருவமுடையவர் (அல்லது அருள் புரியத் தயாராய் இருப்பவர்); எண்ணவியலாத நற்பயன்களை அளிப்பவர். சகலத்திற்கும் பிரபு. உலகத்திற்கு அதீத மானவர். (அத்தகையவர்) எனது உள்ளத்தில் எப்பொழுதும் உறைகின்றார்.

**ஆரூ4-பக்தி-கு3ண-குஞ்சித-பா4வ-சாப**
**யுக்தை: சிவஸ்மரண-பா3ணக3ணை-ரமோகை4: ।**
**நிர்ஜித்ய கில்பி3ஷ-ரிபூன் விஜயீ ஸுதீ4ந்த்3ரஸ்-**
**ஸாநந்த3-மாவஹதி ஸுஸ்தி2ர-ராஜலக்ஷ்மீம் ॥** 71

எவன் சிறந்த பக்தியென்னும் நாண்கயிற்றினால் வளைக்கப்பட்ட பாவனை யென்ற வில்லில் தொடுக்கப்பட்ட வீணாகாத சிவத் தியானம் என்ற அம்புகளால் தீவினைகளென்கிற பகைவர்களை அழித்து வெற்றி கொள்கிறானோ அவனே சிறந்த அறிவாளியாகிறான்; என்றும் நிலைத்த (மோக்ஷ) ஸாம்ராஜ்ய ஸம்பத்தை அடைகிறான்.

**த்4யானாஞ்ஜனேன ஸமவேக்ஷ்ய தம: ப்ரதே3சம்**
**பி4த்வா மஹாப3லிபி4-ரீச்வரநாம-மந்த்ரை: ।**
**தி3வ்யாச்ரிதம் பு4ஜக3 பூ4ஷண-முத்3வஹந்தி**
**யே பாத3பத்3ம-மிஹ தே சிவ தே க்ருதார்தா2: ॥** 72

எவர்கள் தியானமென்னும் மையால் (புதையலிடத்தை) பரிசோதித்து அறிந்து கொண்டு, அதை மறைக்கும் அஞ்ஞானமென்னும் இருளையகற்றி, ஈச்வரனது நாமங்களாகிய மந்திரம் ஜபித்து, அதையே சிறந்த பலியாகத் தந்து, தேவர்களால் தஞ்சம் புகப்பெற்றதும், ஸர்பாபரணங்கள் கொண்டதுமான உங்களது திருவடி என்ற பத்மநிதியை வெளிக்கொண்டு வருகின்றனரோ அவர்கள் தான் இவ்வுலகில் வாழ்க்கைப் பயனைப் பெற்றவராகின்றனர், (மை போட்டு புதையல் உள்ள இடத்தை அறிந்து, பிறகு பலி கொடுத்துப் புதையலை வெளிக்கொண்டு வருவது வழக்கம்.)

**பூ4தா3ரதா-முத3வஹத்3-யத3பேக்ஷயா ஶ்ரீ-**
**பூ4தா3ர ஏவ கிமதஸ் ஸுமதே லப4ஸ்வ ।**
**கேதா3ர-மாகலித-முக்தி-மஹௌஷதீ4னாம்**
**பாதா3ரவிந்த3-ப4ஜனம் பரமேச்வரஸ்ய ॥** 73

நன்னெஞ்சே! எதை விரும்பி திருமகளையும், பூதேவியையும் மனைவியராகக் கொண்டு திருமால் வராஹ உருக்கொண்டாரோ, முக்தியெனும் சிறந்த மூலிகையின் விளை நிலமாக எது உள்ளதோ, அந்தப்பரமேச்வரனது பாதகமல ஸேவையைப் பெறுவாயாக! அதைவிட உனக்கு மேலானது எது?

**ஆசா-பாச-க்லேச-து3ர்வாஸனாதி3-**
**பே4தோ3த்3யுக்தைர்-தி3வ்யக3ந்தை4-ரமந்தை3: ।**
**ஆசா-சாடீகஸ்ய பாதா3ரவிந்த3ம்**
**சேத: பேடீம் வாஸிதாம் மே தனோது ॥** 74

எனது மனமாகிய பெட்டி ஆசாபாசங்களால் கெட்ட வாஸனைகள் நிரம்பி யுள்ளது. அதைத் தங்களது திருவடித் தாமரையினுடைய சிறந்த நறுமணங்கள் மணமுள்ளதாகச் செய்யட்டும்.

**கல்யாணினம் ஸரஸ-சித்ர க3திம் ஸவேக3ம்**
**ஸர்வேங்கி3தஜ்ஞ-மனக4ம் த்4ருவலக்ஷணாட்4ய4ம் ।**
**சேதஸ்துரங்க3-மதி4ருஹ்ய சர ஸ்மராரே**
**நேதஸ்-ஸம்ஸ்த ஜக3தாம் வ்ருஷபா4தி4ரூட4 ॥** 75

தலைவா! வ்ருஷபத்தில் அமர்ந்தவரே! காமனையழிப்பவரே! எனது மனமாகிய குதிரையில் அமர்ந்து சஞ்சரிப்பீராக, அக்குதிரை மங்கள வடிவுடையது - அழகிய பற்பல விதமான நடையுடையது - வேகமுள்ளது - நோக்கமறிந்து பழகும் அறிவுடையது - குற்றமற்றது. அத்ருஷ்டரேகை. சுழியெனும் சுபலக்ஷணங்களும் உடையது.

**ப4க்திர்-மஹேச பத3-புஷ்கர-மாவஸந்தீ**
**காத3ம்பி3னீவ குருதே பரிதோஷவர்ஷம் ।**
**ஸம்பூரிதோ ப4வதி யஸ்ய மனஸ்தடாகஸ் -**
**தஜ்ஜன்ம - ஸஸ்ய - மகி2லம் ஸப2லஞ்ச நான்யத் ॥** 76

எவருடைய மனமாகிய குளம், மஹேசனது திருவடிகளாகிய வானத்தில் விளங்கும் பக்தியெனும் மேகக்கூட்டம் பொழியும் பேரின்பமென்னும் மழையால் நிரப்பப்படுகிறதோ, அவரது பிறவியாகிற பயிர் வீண் போகாது முழுப்பயனை அடைந்ததாகும். மற்ற எதுவும் அல்ல.

**பு3த்3தி4: ஸ்தி2ரா ப4விது-மீச்வர-பாத3பத்3ம-**
**ஸக்தா வதூ4ர்-விரஹிணீவ ஸதா3 ஸ்மரந்தீ ।**
**ஸத்3பா4வனா-ஸ்மரண-த3ர்சன-கீர்த்தனாதி3**
**ஸம்மோஹிதேவ சிவமந்த்ர-ஜபேன விந்தே ॥** 77

பரமனது திருவடித்தாமரையில் பற்றுக் கொண்ட எனது புத்தி என்கிற கன்னி அவைகளில் நிலைபெறுவதற்காக எப்பொழுதும் அத்திருவடியையே நினைத்தும், அதைப்பற்றிய கற்பனை செய்தும், மானஸீகமாகக் கண்டுகொண்டும், எண்ணிக்கொண்டும், புகழ்ந்து பாடிக்கொண்டும், சிவமந்திர ஜபத்தால் உணர்ச்சி யிழந்தும், பர்த்தாவின் பிறிவாற்றாமையால் வாடி நிற்கும் விரஹிணியைப்போல கவலைப்படுகிறது

**ஸது3பசார-விதி4ஷ்-வனுபோ3தி4தாம்**
**ஸவிநயாம் ஸுஹ்ருத3ம் ஸது3பாச்ரிதாம் ।**
**மம ஸமுத்3த4ர பு3த்3தி4-மிமாம் ப்ரபோ4**
**வரகு3ணேன நவோட4-வதூ4மிவ ॥** 78

ஆண்டவனே! எனது புத்தி என்ற கன்னி பெரியோர் பணிவிடையில் நன்கு பொதிக்கப்பட்டு - அடக்கமுள்ளவளாக - நல்லிதயம் படைத்தவளாக - நற்காரியங் களில் நாட்டமுடையவளாக உள்ளவள். புதிதாக விவாஹமானவளை மணாளன் தனது குணத்தால் மகிழ்விப்பதுபோல், எனது புத்தி என்கிற கன்னிகையைக் கை தூக்கிவிடு வீராக!

**நித்யம் யோகி$^{3}$மனஸ்-ஸரோஜத$^{3}$ல-ஸஞ்சார-க்ஷமஸ்-த்வத்கரம்:**
**சம்போ$^{3}$தேன கத$^{2}$ம் கடோ$^{2}$ர யமராட்$^{3}$வக்ஷ: - கவாடக்ஷதி: |**
**அத்யந்தம் ம்ருது$^{3}$லம் த்வத$^{3}$ங்க்$^{4}$ரியுக$^{3}$லம் ஹர மே மனச்-சிந்தயத்-**
**யேதல்லோசன-கோ$^{3}$சரம் குரு விபோ$^{4}$ ஹஸ்தேன ஸம்வாஹயே || 79**

சம்போ! தங்களுடைய மிகமிக மென்மையான அடிவைப்பு, யோகிகளது மனமாகிய தாமரை இதழ்களின் மேலேயே எப்போதும் ஸஞ்சரிக்கத் தக்கது. அதைக்கொண்டு மிக முரடான யமதருமராஜனது கதவு போன்ற மார்பை எங்ஙனம் பிளந்தீர்? ஐயோ! (இதை நினைத்து) என் மனம் வியாகுலப்படுகிறது. விபுவே! அவ்வடியை எனது கண்களுக்குத் தோன்றச்செய்யும். என் கைகளால் பிடித்துவிடுகிறேன்.

**ஏஷ்யத்யேஷ ஜனிம் மனோ (அ)ஸ்ய கடி$^{2}$னம் தஸ்மிந் நடானீதிமத்$^{3}$**
**ரக்ஷாயை கி$^{3}$ரிஸீம்னி கோமலபத$^{3}$ந்யாஸ: புராப்$^{2}$யாஸித: |**
**நோ சேத்-திவ்ய-க்$^{3}$ருஹாந்தரேஷு ஸுமனஸ்-தல்ஷு வேத்$^{3}$யா-தி$^{3}$ஷு**
**ப்ராயஸ்ஸத்ஸு சிலாதலேஷு நடனம் சம்போ$^{4}$ கிமர்த்த$^{2}$ம் தவ || 80**

சம்போ! தாங்கள் நடனம் புரிவதற்கு தேவர் மனைகள் இருக்கின்றன - பூக்களாலான படுக்கைகள் உள்ளன - மேடைகளுமுள்ளன. அங்ஙனமிருக்க கற்பாறைகள் நிரம்பிய மலையில் நடனம் புரிவது எக்காரணத்துக்காக?" “இந்த ஜீவன் (அடியேன்) பிறப்பான்; இவனது மனமோ மிகக் கரடுமுரடாயிருக்கும். அதில் நர்த்தனமாட வேண்டி வரும்" என (நீ) கருதி, என்னைக் காக்கவே இவ்விதமாக மலைப்பிரதேசத்தில் உன் மிருதுவான பாதத்தின் ஆடல் முன் கூட்டியே அப்பியாஸிக்கப்பட்டது போலும்!

**கஞ்சித்கால-முமாமஹேச ப$^{4}$வத: பாதா$^{3}$ரவிந்தா$^{3}$ர்சனை:**
**கஞ்சித$^{2}$-த்$^{4}$யான-ஸமாதி$^{4}$ பி$^{4}$ச்ச நதிபி$^{4}$: கஞ்சித் கதா$^{2}$கர்ணனை: |**
**கஞ்சித் கஞ்சித$^{3}$ வேக்ஷணைச்ச நுதிபி$^{4}$: கஞ்சித்$^{4}$த$^{3}$சா-மீத்$^{3}$ருசீம்**
**ய: பராப்னோதி முதா$^{3}$ த்வத$^{2}$ர்ப்பிதமனா ஜீவன் ஸ முக்த: க$^{2}$லு || 81**

உமாமஹேச்வரனே! சிறிது நேரம் திருவடிகளை அர்ச்சித்தும், சிறிது நேரம் தியான ஸமாதிநிலையடைந்தும், சிறிதுநேரம் வணங்கிக்கொண்டும், சிறிதுநேரம் உன் வரலாற்றை சிரவணம் செய்தும், சிறிதுகாலம் மூர்த்தி தரிசனம் செய்தும், சிறிதுகாலம் துதித்தும், இங்ஙனம் தன் மனத்தை மகிழ்ச்சியுடன் உம்மிடம்

அர்ப்பணம் செய்யும் நிலையை எவன் அனுபவிக்கிறானோ அவனே இவ்வுலகில் உயிர் வாழ்க்கையிலேயே மோக்ஷம் அநுபவிக்கும் ஜீவன் முக்தனாவான்.

**பா3ணத்வம் வ்ருஷப4த்வ-மர்த4வபுஷா பா4ர்யாத்வ-மார்யாபதே**
**கோ4ணித்வம் ஸகி2தா ம்ருத3ங்க3 வஹதா சேத்யாதி3ரூபம்-த3தௌ4 |**
**த்வத்பாதே3 நயனார்ப்பணஞ்ச க்ருதவான் த்வத்3 தே3ஹ-பா4கோ3 ஹரி:**
**பூஜ்யாத் பூஜ்யதரஸ்ஸ ஏவ ஹி ந சேத் கோ வா தத3ன்யோ-(அ)தி4க: || 82**

அம்பிகாபதியே! மஹா விஷ்ணுவானவர் திரிபுர ஸம் ஹாரத்தின்போது பாணத்தன்மை, (உன் வாஹன மான) விருஷபத்தன்மை, நினது பாதி உடலைக்கொண்டு மனைவித் தன்மை, (உன் அடிதேடி) பன்றித்தன்மை, (மோஹினி யாக வந்த போது) தோழித்தன்மை, (நடராஜ தாண்டவத்தில்) நினக்கு மிருதங்கம் வாசிப்பவனது தன்மை, இத்தகைய வடிவங்களைத் தாங்கினார். (உன்னை அர்ச்சிக்கையில் ஒரு பூ குறைய) உனது பாதத்தில் தனது கண்ணையும் அர்ப்பித்தார். (சங்கரநாராயணர் அவஸரத்தில்) நினது உடலில் பாதிப் பங்கும் கொண்டார். இக்காரணங்களைக்கொண்டே அவர் பூஜ்யரனை வரிலும் மிகவும் பூஜிக்கத் தக்கவராகிறார். அங்ஙனம் இல்லாவிடில், அவரிலும் மேலானவர் எவர்தான் உளர்.? (அம்பிகையும் திருமாலும் ஒன்றே என்கிற கருத்துப்படி இங்கு" பாதி உடலைக் கொண்டு மனைவித்தன்மை" என்கிறார்.)

**ஜனன-ம்ருதியுதானாம் ஸேவயா தே3வதானாம்**
**ந ப4வதி ஸுக2லேசஸ்-ஸம்சயோ நாஸ்தி தத்ர |**
**அஜனி-மம்ருதரூபம் ஸாம்ப3மீசம் ப4ஜந்தே**
**ய இஹ பரம-ஸௌக்2யம் தே ஹி த4ன்யா லப4ந்தே || 83**

பிறப்பு இறப்புள்ள மற்ற தேவதைகளை ஆராதித்து லவலேசமும் சுகம் ஏற்படாது. இதில் ஐயமில்லை. எவர்கள், பிறப்பு இறப்பு அற்றவரும் பராசக்தியுடன் கூடியவருமான ஈசனை இங்கு ஆராதிக்கின்றனரோ அவர்களே பிறவிப்பயனை யெய்தியவர்கள்; (பிறப்பிறப்பற்ற) பேரின்பத்தை (அவர்களே) பெறுகின்றனர்.

**சிவ தவ பரிசர்யா-ஸந்நிதா4னாய கௌ3ர்யா**
**ப4வ மம கு3ண து4ர்யாம் பு3த்3தி - கன்யாம் ப்ரதா2ஸ்யே |**
**ஸகல-பு4வன-ப2ந்தோ4 ஸச்சிதா3னந்த3-ஸிந்தோ4**
**ஸத3ய ஹ்ருத3ய-கே3ஹே ஸர்வதா3 ஸம்வஸ த்வம் || 84**

சிவனே! உலகை ஆக்கியவரே! உலகமனைத்திற்கும் உறவினரே! ஸச்சிதானந்தக் கடலே! தயை நிறைந்தவரே! கௌரியுடன் கூடிய தங்களுக்குப் பணி செய்யவே எனது நற்குணங்களமைந்த புத்தி என்னும் கன்னிகையை தானம் செய்கிறேன். அவளை ஏற்று எனது ஹ்ருதயமென்ற வீட்டில் நித்ய வாஸம் செய்யுங்கள்.

**ஜலதி4 மத2னத3க்ஷோ நைவ பாதால-பே4தீ3**
**ந ச வன-ம்ருக3 யாயாம் நைவ லுப்3த4: ப்ரவீண: ।**
**அசன-குஸ்ம-பூ4ஷா-வஸ்த்ர-முக்2யாம் ஸபர்யாம்**
**கத2ய கத2மஹம் தே கல்பயானீந்து3 மௌலே ॥** 85

பிறைசூடியே! நான் கடலைக் கடையவியலாதவன், (ஆகவே உனது உணவான ஆலஹாலத்தையும், முடியணியான சந்திரனையும் தர இயலாதவன்) பாதாளத்தைப் பிளக்க முடியாதவன் நான். ஆகவே, உன் ஆபரணமான அரவத்தை நாகலோகத்திலேயிருந்து கொண்டுவர வல்லேனல்லன். நான் காட்டு விலங்குகளை வேட்டையாடவும் வல்லவனான வேடனும் அல்லன், (ஆகவே, உனது உடைகளான யானைத் தோலையும், புலித்தோலையும் அளிக்க முடியாதவன். இங்ஙனமிருக்க உனக்கு நைவேத்யம், புஷ்பம் (முடியணி) ஆபரணம், வஸ்திரம் இவற்றை அர்ப்பணிக்கும் பூஜையை நான் எங்ஙனம் செய்வேன்? சொல்.

**பூஜாத்3ரவ்ய-ஸம்ருத்3த4யோ விரசிதா: பூஜாம் கத2ம் குர்மஹே**
**பக்ஷித்வம் ந ச வா கிடித்வ-மபி ந ப்ராப்தம் மயா துர்லப4ம் ।**
**ஜானே மஸ்தக-மங்க்4ரிபல்லவ-முமா ஜானே ந தே (அ)ஹம் விபோ4**
**ந ஜ்ஞாதம் ஹி பிதாமஹேன ஹரிணா தத்வேன தத்ரூபிணா ॥** 86.

எங்கும் நிறைந்தவனே! உமை மணாளனே! யான் உனது பூஜைக்கு ஏற்ற பொருளை ஸம்ருத்தியாகச் சேகரித்தேனாயினும், பூஜை செய்வது எங்ஙனம்? ஏனெனில், என்னால் அன்னப்பறவைத் தன்மையோ, பன்றித் தன்மையோ அடையப் படவில்லை. இனி அடையவும் இயலாது. எனவே, உன் முடியையும், தளிரடியையும் நான் அறியவில்லை. அன்னம், பன்றி இவ்வுருவங்களைக்கொண்டும் பிரம்மாவினாலும், விஷ்ணுவினாலும் உம் திருவுருவம் அறியப்படவில்லையே! ('உருவமே புலனாகாதபோது எப்படி மூர்த்தி வழிபாடு செய்வது?'என்பது கருத்து.)

**அசனம் க3ரலம் பணீ கலாபோ**
**வஸனம் சர்ம ச வாஹனம் மஹோக்ஷ: ।**
**மம தா3ஸ்யஸி கிம் கிமஸ்தி சம்போ4**
**தவ பாதா3ம்பு3ஜ-ப4க்திமேவ தே2ஹி ॥** 87

சம்போ! உமக்கு உணவு விஷம்; அணி பாம்பு; ஆடை தோல் வாஹனமோ காளை. (எனக்குக் கொடுக்க உம்மிடம்) யாது உளது? எனக்கு எதை அளிக்கப்போகிறீர்? (உம்மால் கொடுக்கக்கூடியதான) "நினது திருவடியில் பக்தி" என்ற ஒன்றையே கொடுப்பீராக!

**யதா3 க்ருதாம்போ4 நிதி4-ஸேதுபந்த4ன:**
**கரஸ்தலாத4: க்ருத-பர்வதாதி4ப: ।**
**ப4வானி தே லங்கி4த- பத்3மஸம்ப4வ:**
**ததா3 சிவார்சா-ஸ்தவ - பா4வன-க்ஷம: ॥** 88

சிவனே! (ராமலிங்கப் பிரதிஷ்டை செய்த ஸ்ரீ ராமனைப் போல்) கடலிலும் அணை கட்டும் திறன் வாய்ந்தவனாகவும், (அகஸ்தியரைப் போல விந்திய) மலையரசைத் தனது கைத்தலத்தால் அமுக்கும் திறமை வாய்ந்தவனாகவும், கமலத்துதித்த பிரம்மாவையும் தாண்டியவனாகவும் (பிறப்பைக் கடந்தவனாகவும்) நான் எப்போது ஆகிறேனோ அப்பொழுதுதான் உம்மை அர்ச்சிக்கவும், தோத்த ரிக்கவும், தியானிக்கவும் சக்தனாவேன்.

**நதிபி4ர்-நுதிபி4ஸ்-த்வமீச பூஜா-**
**விதி4பி4ர்த்4யான-ஸமாதி4பி4ர்-ந துஷ்ட: ।**
**த4னுஷா முஸலேன சாச்மபி4ர் வா**
**வத3 தே ப்ரீதிகரம் ததா2 கரோமி ॥** 89

ஈசனே! வில். உலக்கை, கல் முதலியவற்றால் (அடித்த அர்ஜுனன், சாக்கிய நாயனார் ஆகியோரிடம்) நீர் பிரீதியடைவதுபோல், உம்மை வணங்குவ தாலும், துதி செய்வதாலும், ஆராதிப்பதாலும் திருப்தியடைவதில்லை. எனவே உமக்கு விருப்பமான வழிபாடு எது என்று கூறுவீராக. அவ்விதமே செய்கிறேன்.

**வசஸா சரிதம் வதா3மி சம்போ4-**
**ரஹ முத்3யோக3-விதா4ஸு தே(அ)ப்ரஸக்த: ।**
**மனஸாக்ருதி-மீச்வரஸ்ய ஸேவே**
**சிரஸா சைவ ஸதா3சிவம் நமாமி ॥** 90

சம்போ! நான் உயர்வான யோகமுறைகளில் ஈடுபட்டவனல்லன். வாக்கினால் உமது லீலைகளைச் சொல்கிறேன். மனத்தால் ஈச்வரனுடைய உருவத்தை தியானிக்கிறேன். தலையால் எக்காலும் ஸதாசிவத்தைப் பணிகிறேன். (இவ்விதம் முக்கரணங்களையும் உம்மிடத்தில் ஈடுபடுத்துகிறேன்.

**ஆத்3யா (அ) வித்3யா ஹ்ருத்3க3தா நிர்க3 தாஸீத்-**
**வித்3யா ஹ்ருத்3யா ஹ்ருத்3க3தா த்வத்ப்ரஸாதா3த் ।**
**ஸேவே நித்யம் ஸ்ரீகரம் தவத்பதா3ப்3ஜம்**
**பா4வே முக்தேர்-பா4ஜனம் ராஜமௌலே ॥** 91

சந்திரமௌளியே! உனது அருளால் அனாதி காலமாய் மனத்தே குடிகொண்டிருந்த அஞ்ஞானம் அகன்றது. மனோரம்யமான ஞானம் இதயத்தில் தோன்றி விட்டது. முக்தியெனும் திருவையளிக்கும் உமது திருவடியை இடைவிடாது ஸேவித்து தியானிக்கிறேன்.

**தூ3ரீக்ருதானி து3ரிதானி து3ரக்ஷராணி**
**தௌ3ர்பாக்3ய-து3: க3-து3ரஹங்க்ருதி-து3ர்வசாம்ஸி ।**
**ஸாரம் த்வதீ3யசரிதம் நிதராம் பிப3ந்தம்**
**கௌரீச மாமிஹ ஸமுத்3த4ர ஸத்கடாக்ஷை: ॥** 92

உமாபதியே! சுவை ததும்பும் உனது சரிதத்தை இடைவிடாது பருகுகின்ற என்னைவிட்டு பாவங்களும், துரதிர்ஷ்டம், துன்பம், தகாத அஹங்காரம் முதலான அனைத்தும் அப்பால் அகற்றப்பட்டன. இப்பொழுதே என்னைக் கை தூக்கி லிடுவீராக.

**ஸோம-கலாத4ர-மௌலௌ**
**கோமல-க4னகந்த4ரே மஹாமஹஸி ।**
**ஸ்வாமினி கிரிஜாநாதே2**
**மாமக-ஹ்ருத3யம் நிரந்தரம் ரமதாம் ॥** 93

சந்திரகலையை சிரசில் சூடியவரும், கார்மேகம் போன்ற கண்டத்தை உடையவரும், உலகத்தின் உடைமையாளரும், பார்வதீகாந்தனுமாகிய பேரொளியில் எனதுள்ளம் இடைவிடாது களித்திருக்கட்டும்.

**ஸா ரஸனா தே நயனே தாவேவ கரௌ ஸ ஏவ க்ருத-க்ருத்ய: ।**
**யா யே யௌ யோ ப4ர்க3ம் வத3தீக்ஷேதே ஸதா3ர்சத: ஸ்மரதி ॥** 94

பரமசிவனை எது பேசுகிறதோ அதுவே நாக்கு; எவை தரிசிக்கின்றனவோ அவையே கண்கள்; எவை அர்ச்சிக்கின்றன வோ அவையே கைகள்; எவன் ஸதா ஸ்மரிக்கின்றானோ அவனே வாழ்க்கைப் பயனையடைந்தவன்.

**அதிம்ருது3லௌ மம சரணா-வதிகடி3னம் தே மனோ ப4வானீச ।**
**இதி விசிகித்ஸாம்ஸந்த்யஜ கத2மாஸீத்3-கி3ரௌ ததா2 ப்ரவேச: ॥** 95

சிவனே! பவானீபதியே! "உனதுள்ளம் மிகக் கரடுமுரடானது. எனது திருவடிகளோ மிக மென்மையுள்ளவை" என்றிவ்வாறு உமது உள்ளத்தில் எழும் சந்தேஹத்தை விட்டொழியும். அப்படியாயின் அவை (கைலாய) மலையில் எங்ஙனம் எப்படி சஞ்சரிக்கின்றன?

**தை4ர்யாங்குசேன நிப்4ருதம்**
**ரப்4ஸா-தா3க்ருஷ்ய ப4க்தி-ச்ருங்க2 லயா ।**
**புரஹர சரணாலானே**
**ஹ்ருத3ய-மதே3ப4ம் ப4தா4ன சித்3யந்த்ரை: ॥** 96

முப்புரமெரித்தவரே! எனது மனம் என்ற மதங்கொண்ட யானையை உறுதியெனும் அங்குசத்தால் அடக்கி, பக்தியெனும் சங்கிலிகொண்டு வலிந்து இழுத்து, உமது திருவடியெனும் கட்டுத்தறியில் ஞானமாகிய யந்திரங்களைக் கொண்டு கட்டிவிடு வீராக.

**ப்ரசரத்யபி4த: ப்ரக3ல்ப4-வருத்தயா**
**மத3வானேஷ மன: கரீ க3ரீயான் ।**
**பரிக்3ருஹ்ய நயேன ப4கதி-ரஜ்வா**
**பரம ஸ்தா2ணுபத3ம் த்3ருட4ம் நயாமும் ॥** 97

பரமேச்வரா! எனது மனமாகிய மதம்பிடித்த இந்த பெரிய யானை அடக்கவியலாததாக இங்குமங்கும் திரிகிறது. இதை நயமாக பக்தியெனும் கயிற்றால் கட்டி உன் வசத்தில் வைத்து, அசைவற்ற நிலைக்கு (பிரம்ம ஸமாதி நிலைக்கு) இழுத்துச் செல்வீராக.

**ஸர்வாலங்காரயுக்தாம் ஸரலபத3யுதாம் ஸாது4வருத்தாம் ஸுவர்ணாம்**
**ஸத்3 பி4ஸ்ஸம்ஸ்தூயமானாம் ஸரஸ-குணயுதாம் லக்ஷிதாம் லக்ஷணாட்4யாம்।**
**உத்3யத்3பூஷா-விசேஷா-முபக3த-வினயாம் த்3யோதமானார்த2ரேகா3ம்**
**கல்யாணீம் தே3வ கௌ3ரீ-ப்ரிய மம கவிதா - கன்யகாம் த்வம் க்3ருஹாண ॥** 98

கௌரீ மணாளனான மஹாதேவா! எனது இக்கவிதைக் கன்னிகையை (நீர்) ஏற்றுக்கொள்ள வேண்டும். (பாணிக்கிரஹணம் புரிந்துகொள்ள வேண்டும்.) இனி இச்சுலோகம் கன்னிகையைக் குறிப்பதாயும், கவிதையைக் குறிப்பதாயும் இருபொருள்பட அமைந்துள்ளது.

**கன்னிகையைக் குறிக்கும் பொருள் வருமாறு:**

இவள் எல்லா அலங்காரங்களுடனும் (நகைகளுடன்) கூடியவள்; சீரிய ஒழுக்கம் படைத்தவள்; நல்ல நிறம் கொண்டவள்; ஸாமுத்திரிகா லக்ஷணங்கள் கொண்ட உத்தமி; பிரகாசமான பூஷணங்களால் சிறப்புற்றவள்; வினயம் உடையவள்; தனரேகை ஒளிர்பவள்; மங்கள வடிவினள். (கல்யாணம் புரிய உகந்த கல்யாணி.)

**கவிதையைக் குறிக்கும் பொருள்:**

இக்கவிதைப் பெண் (உவமை முதலான) எல்லா அலங்காரமும் (அணியும்) கூடியவள்; எளிய சொற்களால் ஆக்கப்பட்டவள்; நல்ல விருத்தத்தில் அமைந் தவள்; நல்ல எழுத்துக்களால் உருவானவள்; நல்லோரால் போற்றப்படுபவள்; பலவித (நவ) ரஸங்களும், சிறப்பியல்புகளும் கொண்டவள்; பக்தியால் லக்ஷ்யத்தை உடையவள்; தர்மோபதேசத்துடன் கூடியவள்; அர்த்தத் தொடர்ச்சியால் பிரகாசிப்பவள்; மங்களத்தை அளிப்பவள்.

**இத2ம் தே யுக்தம் வா பரமசிவ காருண்யஜலதே4**
**க3தௌ திர்யக்3 ரூபம் தவ பதசிரோ-தர்சனதி4யா |**
**ஹரிப்ர2ஹ்மாணௌ தௌ தி3வி பு4வி சரந்தௌ ச்ரமயுதௌ**
**கதம் சம்போ4வாமின் கத2ய மம வேத்3 யோஸி புரத : ||** 99

கருணைக்கடலே! மங்களத்தையளிக்கும் பரமசிவனே! ஆண்டவனே! உமது அடியையும் முடியையும் காண வேண்டி பிரம்மாவும், திருமாலும் முறையே பறவையாகவும், மிருகமாகவும் உருக்கொண்டு வானத்தேயும் பூமியிலும் அலைந்து (உன்னைக் காணாது) களைத்தவர்களானார்கள் என்பது உலகமறிந்ததே. அப்படி யிருக்க எனக்கு எதிரில் எவ்வாறு காணுவதற்குரியவராக ஆகிறீர்கள்? இது உமக்குப் பொருத்தம் தானா?

**ஸ்தோத்ரேணால-மஹம் ப்ரவச்மி ந ம்ருஷா தே3வா விரிஞ்சாத2ய:**
**ஸ்துத்யானாம் க2ணனாப்ரஸங்க - ஸமயே த்வாமக்ர - கண்யம் விது: |**
**மாஹாத்ம்யாக்3ர-விசாரண-ப்ரகரணே தா4னாதுஷஸ்தோமவத் -**
**தூ4தாஸ்-த்வாம் விது2-ருத்தமோத்தம-பலம் சம்போ4 பவத் ஸேவகா: ||** 100

பரமேச்வரா! நான் துதித்தது போதும். நான் இல்லாததைக் கூறவில்லை. பிரம்மா முதலான தேவர்கள் போற்றத்தக்கவர்களை எண்ணுங்கால் உம்மைத்தான் முதன்மையாக எண்ணி அறிகிறார்கள். உமது அடியார்களும் சிறந்து விளங்கும் பெருமைகளைப்பற்றி ஆராயுங்கால் உமிக்கூட்டத்துடன் கலந்த தான்யங்களில் உமியையகற்றுவதுபோல்; மற்ற வானவர்களை நீக்கி தான்யத்தை ஏற்பதுபோல் உம்மையே உயர்வுக்கெல்லாம் உயர்வென அறிகிறார்கள்



ஸ்ரீசைலம் : ஸ்ரீமல்லிகார்ஜுனர்